॥ श्रीः ॥



श्रीमते लक्ष्मीनृसिंहपरब्रह्मणे नमः ॥
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

श्रीमन्निगमान्तमहादेशिकविरचित

# श्रीमद्रहस्यत्रयसारः

## प्रथमो भागः

श्रीमदहोबिलमठे द्विचत्वारिंशपट्टे मूर्द्धाभिषिक्तैः श्रीमद्वेदमार्गप्रतिष्ठापनाचार्य परमहंसपरिव्राजकाचार्य
सर्वतन्त्रस्वतन्त्रोभयवेदान्ताचार्य श्रीभगवद्रामानुज सिद्धान्तनिर्द्धारणसार्वभौम
श्रीलक्ष्मीनृसिंह दिव्यपादुकासेवक श्रीवण्शठकोप श्री श्रीरङ्गशठकोपयतीन्द्रमहादेशिकैः अनुगृहीतया

# श्री सारबोधिनी

व्याख्यया संवलितः

श्रीमदहोबिलमठे पञ्चचत्वारिंशत्तमपट्टे मूर्द्धाभिषिक्तानां श्रीमत्परमहंसेत्यादि सार्थकबृदावलीभाजां
श्रीलक्ष्मीनृसिंह दिव्यपादुकासेवक श्रीवण्शठकोप श्री नारायण यतीन्द्र महादेशिकानां
दिव्यास्थान पट्टाभिषेक विंशतिहायनपूर्ति महोत्सवे प्रकाशितः ।
(१०-०९-२०१२)

---

प्रकाशकः
श्री नृसिंहप्रिया ट्रस्ट्
चेन्नै

நந்தன ௵ 2012 [ஆவணி மீ 25 உ திருவாதிரை]

ஸ்ரீ:



ஸ்ரீமதே ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம:

ஸ்ரீ நிகமாந்த மஹாதேஶிகன் அருளிய

# ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம்

## முதல் பாகம்

ஸ்ரீமதஹோபிலமடம் திவ்யாஸ்தானத்தில் மூர்தாபிஷிக்தராய் எழுந்தருளியிருந்த
ஸ்ரீமத் வேதமார்க ப்ரதிஷ்டாபநாசார்ய, பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய,
ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரோபய வேதாந்தாசார்ய,
ஸ்ரீபகவத் ராமானுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌம,
ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ திவ்யபாதுகாஸேவக ஸ்ரீவண் ஶடகோப
ஸ்ரீ ஸ்ரீரங்க ஶடகோப யதீந்த்ர மஹாதேஶிகன் (42வது பட்டம்) அநுக்ரஹித்த

# ஸ்ரீ ஸாரபோதிநீ

எனும் வ்யாக்யானத்துடன் கூடியது

ஸ்ரீமதஹோபிலமடம் திவ்யாஸ்தானத்தில் மூர்தாபிஷிக்தராய் எழுந்தருளியிருக்கும்
ஸ்ரீமத் வேதமார்க ப்ரதிஷ்டாபநாசார்ய பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய,
ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரோபய வேதாந்தாசார்ய,
ஸ்ரீபகவத் ராமானுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌம,
ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ திவ்யபாதுகாஸேவக ஸ்ரீவண் ஶடகோப
ஸ்ரீநாராயண யதீந்த்ர மஹாதேஶிகனின் (45வது பட்டம்) திவ்யாஸ்தான பட்டாபிஷேக
இருபதாவது வருஷ பூர்த்தி மஹோத்ஸவ தினமான நந்தன ஷு ஆவணி மீ 25 உ
(10-09-2012) திங்கட்கிழமை திருவாதிரை நக்ஷத்ரத்தில் வெளியிடப்பட்டது.

வெளியீடு

ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா ட்ரஸ்ட் – சென்னை

முதற் பதிப்பு — 1954
இரண்டாம் பதிப்பு — 2012

விலை ரூ. 375/- (பாகம் – 1)

கிடைக்குமிடம்:–

ஸ்ரீநிருஸிம்ஹப்ரியா,
நெ.30, வெங்கடேச அக்ரஹாரம்,
மைலாப்பூர், சென்னை – 600 004.
போன்: 044 – 2461 1540 / 2461 4402

*Printers:*
**The Ind-com Press,**
393, Velachery Main Road,
Vijayanagar, Chennai - 600 042
e-mail: info@indcompress.com

|| श्री ||

**Sri Ahobila Mutt**

ஸ்ரீ அஹோபிலமடம்

Camp ____________

**SRI AHOBILA MATH**
8-A, Aarathi Nagar,
(Behind Selaiyur Police Station)
East Tambaram, Chennai-600 059.



Sri ____________

Date: 23 - 08 2012



॥श्रीमते श्रीलक्ष्मीनृसिंह परब्रह्मणे नमः॥
॥श्रीमते श्रीवण्शठकोप श्री वेदान्तदेशिक यतीन्द्र महादेशिकाय नमः॥

ஸ்ரீ:

आभगवत्तः प्रथितामनघामाचार्यसन्ततिं वन्दे ।
मनसि मम यत्प्रसादाद्वसति रहस्यत्रयस्य सारोऽयम् ॥

குற்றமற்றதும், ப்ரஸித்தமானதுமான, ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹன் தொடக்கமாக, ஸ்ரீமதாதிவண்சடகோப யதீந்த்ர மஹாதேசிகன் வழியாக ப்ரவஹித்துக் கொண்டிருக்கும் ஆசார்ய பரம்பரைகளின் அநுக்ரஹத்தாலே நம் ஹ்ருதயத்திலே ஸ்ரீவேதாந்தாசார்யன் அருளிய, எளியதும் - கம்பீரமானதுமான, ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தின் ஸார, ஸாரதமமான அர்த்தங்கள் நிலைபெற்றிருக்கின்றன. அந்த ஆசார்ய பரம்பரைக்கு நம்முடைய ப்ரணாமங்கள்.

நம் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் ஸதாசார்யர்கள் பக்கலிலே காலக்ஷேபமாக பண்ணக்கடவதான க்ரந்த சதுஷ்ட்யங்களில் முக்யமானது ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிய ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம். ஸாமாந்ய ஸாஸ்த்ரங்களின் ஜ்ஞாநம் கொண்டே, ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களை, காலக்ஷேபம் செய்யாமலேயே அறிந்தாலும் அறியலாம். ஆனால், ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தை மட்டும் காலக்ஷேபம் செய்தால்தான் அறியமுடியும் என்பர் பெரியோர்கள்.

ஸ்ரீ ஸந்நிதி ஸம்ப்ரதாயத்தில், நடுநாயகமாய், ஸர்வ சாஸ்த்ர பாரங்கதராய், ஜகத் விக்யாதியாய், ஸுப்ரஸித்த வைபவம் உடையவராய், ஸதாசார்யராய் ஸ்ரீமதஹோபிலமடம் திவ்யாஸ்தானதில் 42-வது பட்டத்தை அலங்கரித்தவராய், எழுந்தருளியிருந்த ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹ திவ்ய பாதுகா ஸேவக ஸ்ரீவண்சடகோப ஸ்ரீரங்க சடகோப யதீந்த்ர மஹாதேசிகன் திருவடியை ஆச்ரயித்து ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களைப் பூரணமாக அப்யஸித்து, பின்னர் ஸ்ரீமத் தேவனார் விளாகம் அழகியசிங்கரின் சேர்த்தியில், ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம், ஸ்ரீ பகவத் விஷயம், ஸ்ரீ கீதா பாஷ்யம் ஆகியவற்றை அதிகரித்தோம். பல நியமங்கள் கூடிய காலக்ஷேப கோஷ்டி. இன்னமும், ஸ்ரீ இஞ்சிமேட்டு அழகியசிங்கர் ஸாதித்தவைகள் காதில் ஒலித்துக் கொண்டே இருக்கின்றன. அந்த அழகியசிங்கரின் பரிபூர்ண அநுக்ரஹமே, நாம் இந்த திவ்யாஸ்தானத்தை ஏற்றதற்கு காரணமாகும்.

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்திற்கு, ஸ்ரீ இஞ்சிமேட்டு அழகியசிங்கர் ஓர் அத்யத்புதமான வ்யாக்யானத்தை அருளியுள்ளார். அதற்கு, "ஸ்ரீ ஸாரபோதினீ" என பெயரிட்டுள்ளார். மணிப்ரவாள நடையில் அமைந்துள்ள இந்த க்ரந்தத்தை, ஸ்ரீஸந்நிதி ஸம்ப்ரதாய வித்வான்களும், மற்றுமுள்ள மஹான்களும், ஸ்ரீஅழகியசிங்கரின் வ்யாக்யானத்தைக் கொண்டு, காலக்ஷேபம் ஸாதித்துள்ளனர். நாமும், பல பேருக்கு சொல்லியுள்ளோம்.

இன்றைய காலத்தில் க்ரந்த பரிசயம் குறைவாக உள்ளதால் தத்கால வித்வான்களும், ஸ்ரீஅழகியசிங்கரின் வ்யாக்யானத்தைக் கொண்டே காலக்ஷேபம் சொல்ல வேண்டும். கேட்பவர்களும் வ்யாக்யானத்தில் உள்ள ரஸத்தை அனுபவிக்க வேணும் என்கிற எண்ணத்துடன், ஸ்ரீ மாலோலனிடத்திலும், ஸ்ரீஅழகியசிங்கர்கள் திருவடிகளிலும், அசஞ்சலமான பக்தி உடையவரும், ஸ்ரீமத் இஞ்சிமேட்டு அழகியசிங்கரின் பூர்வாச்ரம தௌஹித்ரரும், ஸ்ரீஸந்நிதி ஆஸ்தான வித்வானும் 'ஸ்ரீந்ருஸிம்ஹ ப்ரியா'வின் 50 ஆண்டுகாலம் ஸம்பாதகரும், நமக்கு மிகவும் ப்ரிய ஸுஹ்ருத்துமான புரிசை நடாதூர் ஸ்ரீபாஷ்ய ஸிம்ஹாஸனம் ஸ்ரீ உ.வே. க்ருஷ்ணமாசார்யர் ஸ்வாமியிடம் "ஸ்ரீ ஸாரபோதினீ" இரண்டு பாகத்தையும் நாகர அக்ஷரத்தில் அச்சிட்டு வெளியிட வேணும் என்கிற அபிலாஷையைத் தெரிவித்தும், அதற்கான செலவை நாமே ஏற்கிறோம் என முன்பணமும் கொடுக்கப்பட்டது. அந்த ஸ்வாமியும், அதற்கான ஏற்பாடுகளை உடனே செய்தாயிற்று. ஸ்ரீ மாலோலன் அந்த ஸ்வாமியை தன் மலரடிக்கீழ் வைத்துக் கொண்டு விட்டான்.

பல ச்ரமங்களைக் கடந்து தற்போது முதற்பாகம் வெளிவரப் போவதாகவும், அதற்கான ஸ்ரீமுகத்தை "ஸ்ரீந்ருஸிம்ஹ ப்ரியா" டிரஸ்டிகள் ப்ரார்த்தித்ததின் பேரில், இந்த ஸ்ரீகோசம் வெளிவருவதற்கான கைங்கர்யத்தில் ஈடுபட்டவர்கள் அனைவருக்கும் ஸ்ரீமாலோலன் ஸ்ரீ அழகியசிங்கர்களின் பரிபூர்ண அநுக்ரஹங்கள் உண்டாகி, ஸகல ஸௌபாக்கியங்களுடன் இம்மாதிரி கைங்கர்யங்கள் செய்து வரவேணுமாய் மங்களாசாஸனம் பண்ணுகிறோம். கூடிய சீக்ரத்தில் இரண்டாம் பாகத்தையும், வெளிக் கொணர வேணும் என ஆசாஸிக்கிறோம்.

त्रय्यन्तगुरुभिर्दत्तः सर्वेषां श्रेयसे भवन् ।
रहस्यत्रयसारोऽयं रहस्येषु विशिष्यते ॥

[signature]

H. H. THE JEER OF
SRI AHOBILA MUTT

**Sri Ahobila Mutt**
ஸ்ரீ அஹோபிலமடம்
Camp ____________

SRI AHOBILA MATH
8-A, Aarathi Nagar,
(Behind Selaiyur Police Station)
East Tambaram, Chennai-600 059.

॥ श्री ॥



Sri ____________

Date: 23 - 08 2012



॥ श्रीमते श्रीलक्ष्मीनृसिंह परब्रह्मणे नमः ॥
॥ श्रीमते श्रीवण्शठकोप श्री वेदान्तदेशिक यतीन्द्र महादेशिकाय नमः ॥
॥ श्रीमते श्रीलक्ष्मीनृसिंह दिव्य पादुका सेवक श्रीवण्शठकोप श्री नारायण यतीन्द्र महादेशिकाय नमः ॥

---

**अहोबिले गारुडशैलमध्ये कृपावशात् कल्पित सन्निधानम् ।**
**लक्ष्म्या समालिङ्गित वामभागं लक्ष्मीनृसिंहं शरणं प्रपद्ये ॥**

நம் ஆஸ்தானத்தில் 42ம் பட்டத்தில் மூர்தாபிஷிக்தராய் எழுந்தருளியிருந்த இஞ்சிமேடு ஸ்ரீமதழகியசிங்கர் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்திற்கு ஸாரபோதிநீ என்கிற அத்யத்புதமான வ்யாக்யானம் அருளிச் செய்தாயிற்று. அதை தேவனூர்விளாகம் ஸ்ரீமதழகியசிங்கர் 1954ம் வருஷம் முத்ரணம் பண்ணி ப்ரகாசம் செய்தாயிற்று. நல்ல வித்வான்களுக்குக் கூட மிகவும் கடினமானதை எல்லோருக்கும் புரியும்படியாக மணிப்ரவாளத்தில் அனுக்ரஹித்ததை தற்சமயம் நம் ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா மூலம் தேவநாகரீ அக்ஷரத்தில் முத்தரணம் செய்துள்ளது. இந்த ஸ்ரீகோஶத்தை நன்கு பரிசோதித்து அச்சிட்டு வித்வான்களுக்கும், காலக்ஷேபம் செய்கிறவர்களுக்கும் நன்கு புரியும்படியாக வெளியிட்டுள்ள நம் ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா ஸம்பாதகர் வில்லிவலம் லக்ஷ்மீ நரஸிம்ஹாசார்யர் ஸ்வாமிக்கும், இக் கைங்கர்யத்தில் ஈடுபட்ட மற்றையோர்க்கும் நமது மங்களாசாஸனத்தைச் செய்கிறோம். இதேபோல் நம் ஸந்நிதியில் உள்ள ப்ராசீனமான ஸ்ரீகோஶங்களை அச்சிட்டு லோகோபகாரம் செய்ய அவர்களுக்கு அரோக த்ருட காத்ரத்தையும், ஆயுளையும் அநுக்ரஹிக்க வேணுமாய் நம் ஸ்ரீமாலோலன் திருவடிகளிலும், ஸ்ரீமதாசார்யன் திருவடிகளிலும் ப்ரார்த்தித்து இந்த ஸ்ரீமுகம் அனுக்ரஹிக்கப்பட்டது. இந்த ஸ்ரீகோஶத்தை வித்வான்கள் மற்றும் ஸம்ப்ரதாயம் தெரிந்து கொள்ள ஆசை உடையவர்கள் வாங்கி ஸ்ரீமாலோலன், ஸ்ரீதேசிகன், ஸ்ரீமதாசார்யர்கள் அனுக்ரஹத்திற்குப் பாத்ரபூதர்களாக வேண்டும்.

**समस्त मङ्गलानि भवन्तु**

ஸ்ரீவண் ஶடகோப ஸ்ரீ ரங்கநாத யதீந்த்ர மஹாதேஶிக:

46ம் பட்டம் ஸ்ரீமதழகியசிங்கர் ஸ்ரீ அஹோபிலமடம்

ஸ்ரீ:

# ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம் (ஸாரபோதிநீ)

## பொருளடக்கம்

## I. அர்த்தாநுஶாஸன பாகம்



அல்லி மாதர் புல்க நின்ற ஆயிரம் தோளன்



ஸ்ரீ வெள்ளைப் பரிமுகனும், ஸ்வாமி ஸ்ரீ தேசிகனும்

ஸ்ரீமதாதிவண் ஶடகோப யதீந்த்ர மஹாதேஶிகன் (முதல் பட்டம்)



॥ प्रपद्ये निरवद्यानां निषद्यां गुणसंपदाम् । शरणं भवभीतानां शठकोप मुनीश्वरम् ॥

42வது பட்டம் ஸ்ரீமதழகியசிங்கர்

श्री सारबोधिनी व्याख्यातारः



॥ श्रीमद्रङ्गशठारि योगिनृपतिं श्रेयोनिधिं संश्रये ॥

ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹ திவ்ய பாதுகா ஸேவக ஸ்ரீவண் ஶடகோப
ஸ்ரீ ஸ்ரீரங்க ஶடகோப யதீந்த்ர மஹாதேஶிகன்

43வது பட்டம் ஸ்ரீமதழகியசிங்கர்

एतद्ग्रन्थ प्रकाशकाः



॥ सेवे यतीन्द्रं सकलगुणनिधिं वीररघ्वीट् शठारिम् ॥

ஸ்ரீவண் ஶடகோப ஸ்ரீவீரராகவ ஶடகோப
யதீந்த்ர மஹாதேஶிகன்

44வது பட்டம் ஸ்ரீமதழகியசிங்கர்



॥ श्री वेदान्तदेशिक यतीन्द्रं अहं प्रपद्ये ॥

ஸ்ரீவண் ஶடகோப ஸ்ரீவேதாந்த தேஶிக யதீந்த்ர மஹாதேஶிகன்

45வது பட்டம் ஸ்ரீமதழகியசிங்கர்



॥ सेवे रङ्गधुरीणशासनवशं नारायणं यागिनम् ॥

ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ திவ்யபாதுகாஸேவக ஸ்ரீவண் ஶடகோப
ஸ்ரீநாராயண யதீந்த்ர மஹாதேஶிகன்

46வது பட்டம் ஸ்ரீமத் அழகியசிங்கர்



॥ श्रीरङ्गनाथ यतिशेखरं आश्रयामः ॥

ஸ்ரீவண் ஶடகோப ஸ்ரீ ரங்கநாத யதீந்த்ர மஹாதேஶிகன்

ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா ஸம்பாதகர்



॥ वन्दे वत्स विभूषणं बुधवरं श्रीकृष्णमार्यं सदा ॥

# விஜ்ஞாபனம்

**वन्दे नृसिंहजायां अनादिमायां अपोहितुं हेयाम् ।**

**सुललितसुन्दरकायां सुरेन्द्रमेयाम् सुरऋषिभिर्ध्येयाम् ॥**

ச்ரிய: பதியாய், ஸகல கல்யாண குணங்களையுடையனுய், பரம காருணிகனுய்ப் போந்த எம்பெருமான் ஒரு கல்பத்திற்கொரு ஜீவனாவது தன்னையுள்ளபடி அறிந்து உஜ்ஜீவிக்கக் கடவனென்கிற எண்ணத்தாலே அடிக்கடி ஜகத்தை ஸ்ருஷ்டி செய்து ப்ரஹ்மாவுக்கு அடியிலேயே வேதோபதேசாதிகளைப் பண்ணியும், ஸநகாதிகளைக் கொண்டு நிவ்ருத்தி தர்மங்களை ப்ரவர்த்திப்பித்தும், நரநாராயண கீதாசார்யனுய் தானே வெளி நின்று ஜ்ஞானுேபதேசங்களைச் செய்தும், கலியுகாரம்பத்தில் ஸ்ரீபாஞ்சராத்ர ஶாஸ்த்ரத்தை ப்ரவர்த்திப்பித்தும், அது மந்தமதிகளுக்கு ப்ரயோஜனமில்லாதிருந்தமை கருதி, தாமே **வென்றி புகழ் திருவேங்கடநாதனென்றும் குருவாய்** தூப்புலில் அவதரித்து நாத, யாமுன, யதிவராதிகளாலே ப்ரவர்த்திதமான வ்யாஸ ஸித்தாந்தத்தைப் பல க்ரந்தங்களாலும் பலபடியாக ஸ்திரப்ரதிஷ்டிதமாக்கி, ப்ரபத்தியை ஸபரிகரமாய், ஸாதிகாரமாய் மாசற விளக்கும் **ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரமென்னும்** இம் மஹாப்ரபந்தத்தை வெளியிட்டருளினுன்.

பின்னர், **பக்தஸ்ய தாநவ ஶிஶோ: பரிபாலநாய பத்ராம் ந்ருஸிம்ஹ குஹநாமதிஜக்முஷஸ்தே । ஸ்தம்பைக வர்ஜமதுநாபி கரீஶநூநம் த்ரைலோக்யமேததகிலம் நரஸிம்ஹ கர்பம் ॥** என்னும்படிக்கு மங்களாசாஸனம் பண்ணப்பட்ட ஸ்ரீந்ருஸிம்ஹன், இம் மஹாப்ரபந்தத்தை, அந்தணர் அந்தியர் எல்லையில் நின்ற அனைத்துலகும் அறிய வேண்டி, தன் சக்தி அனுப்ரவேசமாக ஸ்ரீமதாதிவண் சடகோப யதீந்த்ர மஹாதேசிகனை அவதரிக்கும்படி அநுக்ரஹித்தான். ஸ்ரீமதாதிவண் சடகோப யதீந்த்ர மஹாதேசிகனும், தன்னை ஆச்ரயித்தவர்களுக்கு இப் ப்ரபந்தத்தை காலக்ஷேபமாக ஸாதித்து, **ரஹஸ்யத்ரயஸாராக்ய ராகா சந்த்ரஸ்ய வாரிதி: । வேதாந்த தேசிகஸ் ஸோऽயம்** என விளங்கினார்.

ஸ்ரீகுருபரம்பராஸாரம் தொடக்கமாக முப்பத்திரண்டு அதிகாரங்களைக் கொண்ட இந்த க்ரந்தம், நான்கு பாகங்களாக – அதாவது – 1. அர்த்தாநுஶாஸன பாகம், 2. ஸ்த்திரீகரண பாகம், 3. பதவாக்ய யோஜநா பாகம் 4. ஸம்ப்ரதாயப்ரக்ரியா பாகம் என பிரிக்கப்பட்டுள்ளன. இம் மஹாக்ரந்தத்திற்கு பல மஹான்கள் உரையிட்டருளியுள்ளனர். அவைகளில் ஸாராஸ்வாதிநீ, ஸாரதீபிகை, ஸாரப்ரகாசிகை, ஸாரவிவரணீ, ஸாரதீபிகா ஸங்க்ரஹம் முதலியன வெகு காலத்திற்கு முன் அச்சிடப்பட்டவை. 1920ல் சேட்லூர் வித்வான் ஸ்ரீ.உ.வே. நரஸிம்மாசார்யர் ஸ்வாமியால் எழுதப்பட்ட உரை வெளியிடப்பட்டுள்ளது. 1980ல் ப்ரஸித்த மஹாவித்வான், உத்தமூர் ஸ்ரீ.உ.வே. வீரராகவாசார்யர் ஸ்வாமி ஸாரவிஸ்தரம் எனும் உரையுடன் வெளியிட்டுள்ளார்.

**ஸ்ரீமதஹோபிலமடம் திவ்யாஸ்தானத்தில் மூர்தாபிஷிக்தராய் எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் வேதமார்க ப்ரதிஷ்டாபநாசார்ய, பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய, ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரோபய வேதாந்தாசார்ய, ஸ்ரீபகவத் ராமாநுஜ ஸித்தாந்த நிர்தாரண ஸார்வபௌம, ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ திவ்யபாதுகாஸேவக ஸ்ரீவண் ஶடகோப ஸ்ரீஸ்ரீரங்க ஶடகோப யதீந்த்ர மஹாதேஶிகன்**

**''ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸார''த்திற்கு அத்யத்புதமான ''ஸ்ரீஸாரபோதிநீ'' எனும் வ்யாக்யானத்தை அருளிச்செய்தார்.**

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் க்ரந்தத்தை **ஸ்ரீஸாரபோதிநீ** வ்யாக்யானத்துடன் ஸ்ரீ இஞ்சிமேட்டு அழகியசிங்கர் பல சிஷ்யர்களுக்குக் காலக்ஷேபம் ஸாதித்தாயிற்று. அவர்களில் ஸ்ரீமதழகியசிங்கரால் **ஸாரஸாரஜ்ஞர்** என அநுக்ரஹிக்கப்பட்ட ஸ்ரீ. உ.வே. திருக்கள்ளம் நரஸிம்மராகவாசார்யர் ஸ்வாமி, ஸ்ரீ. உ.வே. பெருக்காரணை சக்ரவர்த்தியாசார்யர் ஸ்வாமி, ஸ்ரீ. உ.வே. பழவேரி ராஜகோபாலாசார்யர் ஸ்வாமி, (ஹிந்தி பண்டிட்) முதலானோர் இதனை ஸ்ரீகோசமாக வெளிவர, ப்ரூப் பரிசோதனைகளைச் செய்து இரு பாகங்களாக ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீவண்ஶடகோப ஸ்ரீவீரராகவஶடகோப யதீந்த்ர மஹாதேஶிகன் ஆத்யக்ஷ்யத்தில் 1954லிலும், 1956லிலும் ப்ரகாஶப்படுத்தப்பட்டது. ஸ்ரீ இஞ்சிமேட்டு அழகியசிங்கர் புஸ்தகமாக வெளிவருதற்கு முன்னமேயே திருநாட்டை அலங்கரித்தாயிற்று.

பின்னர் அவதரித்த ஸ்ரீமதழகியசிங்கர்கள் ஸ்ரீஸாரபோதிநீ வ்யாக்யானத்தைக் கொண்டே ரஹஸ்யத்ரயஸார காலக்ஷேபத்தை ஸாதித்தாயிற்று. ஸ்ரீஸந்நிதி ஆஸ்தான வித்வான்களும் இன்றளவும் ப்ரசாரம் செய்து வருகின்றனர்.

ப்ரக்ருதம் பெரிய ஸ்ரீமத் அழகியசிங்கர் பூர்வாச்ரமத்தில் பல இடங்களில் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம் காலக்ஷேபம் ஸாதித்தாயிற்று. ஸ்ரீஸாரபோதிநீ வ்யாக்யானம் ஓர் ஒப்பற்றதான வ்யாக்யானம். இதில் ஆழங்கால்பட்ட ஸ்ரீமதழகியசிங்கர், பாமரர்களும் அவச்யம் தெரிந்து கொள்ளவேண்டுமென்கிற நோக்கத்துடன் மிகவும் எளிய தமிழில் **ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸார விவரணம்** என ஸ்ரீந்ருஸிம்ஹ ப்ரியாவில் பரிபூர்ண ப்ரஹ்மாநுபவ அதிகாரம் வரையில் எழுதி அருளியாயிற்று. பலரும் இதை வாசித்து தங்களுடைய ஸந்தோஷத்தை வெளிப்படுத்தியுள்ளனர். ஸ்ரீகுருபரம்பராஸாரம் முதல் ஸ்ரீபரதேவதாபாரமார்த்யாதிகாரம் வரை (6 அதிகாரங்கள்) முதல் பாகமாக ஸ்ரீஸந்நிதியிலேயே அச்சிட்டு 1998ல் வெளியிடப்பட்டது. அடுத்த பாகத்தைக் கூடிய விரைவில் வெளியிடவேணும். ஸ்ரீமாலோலன் அநுக்ரஹம் பண்ணவேணும்.

ஸ்ரீஇஞ்சிமேட்டு அழகியசிங்கர், **ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம்** ஸரளமான மணிப்ரவாள நடையிலமைந்திருப்பதாலும், ஸத் ஸம்ப்ரதாயத்தோடு ஸ்ரீபாஷ்யத்தில் சிரபரிசயம் பண்ணின மஹாப்ராஜ்ஞர்களுக்கும் அறியவரிதான அர்த்தங்களைப் பொதிந்து கொண்டிருப்பதாலும் மந்தப்ராஜ்ஞரோடு மஹாப்ராஜ்ஞரோடு வாசியற குணக்ராஹிகளான ஸர்வ ஜனங்களாலும் கொண்டாடப்படும் ஓர் அற்புத க்ரந்த ரத்னம் என க்ரந்தத்தின் மேன்மையைக் கூறி, ஆகையாலிதை சிரகாலம் மஹாபாக்யலப்த ஸதாசார்ய ஶுஸ்ரூஷையாலே ஸம்யக் க்ரஹணம் பண்ணி, பஹுதா மநநம் பண்ணி, பஹுதா ப்ரவசனம் பண்ணி க்ருதார்த்தனானது மாத்ரமன்றிக்கே இத்தோடு வ்யாக்யாத்ருத்வ ரூப ஸம்பந்தத்தையும் பெற்று க்ருதார்த்தனாகக் கருதி இதற்கு வ்யாக்யானம் எழுதுகிறோம் என தன்னுடைய மனோரதத்தையும் வெளியிட்டாயிற்று.

ஸ்ரீமதழகியசிங்கரின் ஸாரபோதிநீ வ்யாக்யானத்தில் மிகவும் அறிய வேண்டியவைகள் பல. அவற்றில் சிலவற்றை இங்கே குறிப்பிடுகிறோம்.

1. குருபரம்பராஸாரம் தனி க்ரந்தமா? அல்லது ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தோடு சேர்ந்ததா?
2. தத்த்வத்ரய சிந்தநாதிகாரத்தில் ப்ரத்யக்த்வ, ஏகத்வாதிகளின் விளக்கமும், விசாரமும்.
3. பரதேவதா பாரமார்த்யாதிகாரத்தில் எம்பெருமானை ஆச்ரயித்தே மோக்ஷத்துக்கு அநுகுணமான ஆநுஷங்கிக பலன்களைப் பெறலாம் என்பதின் விளக்கம்.
4. அதிகாரி விபாகாதிகாரத்தில் உக்தி நிஷ்டையின் ப்ரபாவத்தை விளக்கும் ப்ரகரணம்.

5. உபாயவிபாகாதிகாரத்தில் பரபக்தி, பரஜ்ஞான விஷய விளக்கம்.
6. கதிசிந்தநாதிகாரத்தில் விரஜைக்கு அக்கரைப்படுத்தி என்பதற்கு வ்யாக்யானம். இப்படி இன்னும் பல.

இப்படிப்பட்ட அத்புதமான க்ரந்தம் க்ரந்தலிபியில் அமைந்திருப்பதால், அனைவரும் அறிந்து ஸ்திரப்ரதிஷ்டமான ஸம்ப்ரதாய ஜ்ஞானத்தைப் பெறவேண்டும் எனத் திருவுள்ளம் கொண்டவராய், அதனை ஸம்ஸ்க்ருதத்தில் (நாகரத்தில்) வெளியிடும்படி, ஸ்ரீமத்வேதமார்கேத்யாதி ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹ திவ்யபாதுகாஸேவக ஸ்ரீவண்சடகோப ஸ்ரீநாராயண யதீந்த்ர மஹாதேசிகன் (45வது பட்டம்) தன்னுடைய மேன்மைக்கு ஸர்வவிதத்திலும் காரணபூதரான ஸ்ரீமத் இஞ்சிமேட்டு அழகியசிங்கரின் 120வது திருநக்ஷத்ரத்தன்று மஹாவித்வான், ஸ்ரீஸந்நிதி ஆஸ்தான வித்வான், ஸ்ரீபாஷ்ய ஸிம்ஹாஸனம், ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா ஸம்பாதகர்(முன்னாள்) ஸ்ரீ.உ.வே புரிசை நடாதூர் க்ருஷ்ணமாசார்யர் ஸ்வாமியின் வலக்கரத்துக்கு ஸ்வர்ணத்தில் தோடா அநுக்ரஹித்து, நியமித்து பல மந்த்ராக்ஷதை அநுக்ரஹித்தாயிற்று.

ஸ்ரீ.உ.வே. புரிசை ஸ்வாமியும் ஸ்ரீநியமனத்தை சிரமேற்கொண்டு ஏற்பாடுகளைச் செய்தாயிற்று. ஸ்ரீமாலோலன் அந்த ஸ்வாமியை **மாக வைகுந்தத்துக்கு** அழைத்துக் கொண்டுவிட்டான்.

இப்புஸ்தகம் வெளிவருவதற்கு பலர் உறுதுணையாக இருந்துள்ளனர். மதுராந்தகம் ஸம்ஸ்க்ருத கலாசாலை அத்யாபகர்கள் ஸ்ரீ.உ.வே. திருக்குடந்தை ஸ்ரீநிவாஸாசார்யார், ஸ்ரீ.உ.வே. தையார் லக்ஷ்மீ நரஸிம்ஹாசார்யார், ஸ்ரீ.உ.வே. ஸ்ரீநிவாஸ ராகவாசார்யர், ஸ்ரீ.உ.வே. குரிச்சி நாராயணாசார்யார், ஸ்ரீ.உ.வே. காவனூர் சக்ரவர்த்யாசார்யார் முதலானோர் பலவிதங்களில் உதவி செய்தனர். அச்சுப்பிழைகள் வராமல் இருக்கவேணும் எனக் கருதி, ஸ்ரீ.உ.வே. வித்வான் புலிக்குன்றம் ஸ்தலசயனாசார்யர் ஸ்வாமியை இப்புத்தகம் முழுவதையும் பார்த்து பரிசோதித்துத் தரவேணுமென ப்ரார்த்தித்தோம். அந்த ஸ்வாமியும் மிகவும் உத்ஸாஹத்துடன் சோதனம் செய்து கொடுத்தார். டாக்டர் ஸ்ரீ.உ.வே. தேவனார்விளாகம் பத்மநாபாசார்யர் ஸ்வாமியும் இக் க்ரந்தத்தை டைப் செய்வதற்கு சிறந்த நபரை ஏற்பாடு செய்தார். அனைவருக்கும் ஸ்ரீமாலோலன், ஸ்ரீமதழகியசிங்கர்கள் அநுக்ரஹங்களால் ஸகல க்ஷேமங்களும் ஏற்படவேணுமாய் ப்ரார்த்திக்கிறோம். மேலும் ஸ்ரீமான் C. ஸம்பத் பலவிதங்களில் உறுதுணையாக இருந்து கைங்கர்யம் செய்துள்ளார். இவருக்கும் ஸ்ரீ மாலோலன், ஸ்ரீமதழகியசிங்கர்களின் அநுக்ரஹங்கள் பரிபூர்ணமாக உண்டாக வேணும்.

இப் புஸ்தகத்தை நல்ல முறையில் பல தடவைகள் ப்ரூப் பார்ப்பதற்காக டைப் செய்து கொடுத்த ஸ்ரீ G.பெரியசாமிக்கு நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்புஸ்தகத்திற்குத் தேவையான போட்டோக்களை ஏற்பாடு செய்த ஸ்ரீமான்கள் N.கோவிந்தராஜன், S.பார்த்தசாரதி (DTP ஆபரேட்டர்கள்) முதலானோர்க்கு எங்களது நன்றி உரித்தாகுக. நல்ல முறையில் ப்ரிண்ட் செய்து கொடுத்த தி இண்ட்-காம் அச்சகத்தாருக்கும் (வேளச்சேரி), பைண்ட் செய்து கொடுத்தவர்களுக்கும் எங்களது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். இக் கைங்கர்யத்தில் பங்கு கொண்ட அனைவருக்கும் எம்பெருமான், ஸ்ரீஅழகியசிங்கர்கள் அநுக்ரஹத்தால் நீண்ட ஆயுளையும், ஐச்வர்யங்களையும் பெற்று வாழ்வார்களாக. இஞ்சிமேடு ஸ்ரீமதழகியசிங்கரின் அனுக்ரஹத்தால் ஆரம்பிக்கப்பட்ட ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகை, பிற்காலத்தில் ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா ட்ரஸ்டாக உருவாக்கப்பட்டு, ஸ்ரீமதழகியசிங்கர்களின் நியமனத்துடன் நடத்தப்பட்டு வருகிறது. மேற்படி ட்ரஸ்டின் நிர்வாகிகள் இக்க்ரந்தத்தை வெளியிடுவதில் உறுதுணையாக இருந்தார்கள். அவர்களுக்கும் ஸ்ரீமாலோலன்,

ஸ்ரீமதழகியசிங்கர்கள் அனுக்ரஹத்தால் ஸகல க்ஷேமங்களும் உண்டாகவேணுமாய் ப்ரார்த்திக்கிறோம்.

ஸ்ரீமாலோலன் ஸ்ரீமதழகியசிங்கர்கள் அநுக்ரஹத்தை அவலம்பித்தே ஆரம்பித்த இக் கைங்கர்யம், பல ச்ரமங்களைக் கடந்து பூர்த்தி பெற்று, நந்தன ஞூ ஆவணி மீ 25ந் தேதி (10.09.2012) திங்கட்கிழமை திருவாதிரை நக்ஷத்ரம் கூடிய சுபதினத்தில் ஸ்ரீமதழகியசிங்கர்களின் திருக்கரங்களால் வித்வான்கள் முன்னிலையில் புஸ்தகமாக (முதல்பாகம்) வெளியிடப்பட்டது பெரிய பாக்யமே. முதல் ப்ரதியை நாவல்பாக்கம், சதுர்வேதஸதக்ரது மஹாவித்வான் ஸ்ரீ. உ.வே. வரதாசார்யர் ஸ்வாமி பெற்றுக்கொண்டார். இந் நன்னாள் ஸ்ரீமதழகியசிங்கர் பட்டாபிஷேகம் கண்டருளி இருபது ஆண்டுகள் பூர்த்தி பெற்ற தினம் என்பது குறிப்பிடத்தக்கது.

மிகுந்த க்ருபையுடன் ஸ்ரீமுகங்கள் அநுக்ரஹித்ததற்கு அடியோங்களுடைய க்ருதஜ்ஞதையை ஸ்ரீமதழகியசிங்கர்கள் திருவடிகளில் ஸவிநயம் ஸமர்ப்பிக்கிறோம்.

இந்த புஸ்தகம் பிழையின்றி நன்கு அச்சிட்டு வெளியிட்டிருப்பது ஸ்ரீமதழகியசிங்கர்களின் அனுக்ரஹமே. ஏதாவது பிழையிருப்பின் அது அடியோங்களைச் சார்ந்தது.

ஸ்ரீதேசிக ஸம்ப்ரதாய குணக்ராஹிகளான வித்வான்கள் அனைவரும் இக் க்ரந்தத்தை ஸேவித்து, ஏதாவது தவறுகள் இருப்பின், சுட்டிக்காட்டி, சிக்ஷித்து, அடுத்த பாகத்தை வெளியிடுவதற்கு ஆலோசனைகளைத் தந்து அநுக்ரஹிக்க வேணுமாய் ப்ரார்த்திக்கிறோம்.

பழவேரி, வில்லிவலம் லக்ஷ்மீ நரஸிம்மதாஸன்
மன்னார்குடி ராஜகோபாலதாஸன்

॥ श्रीः ॥

श्रीमते लक्ष्मीनृसिंहपरब्रह्मणे नमः ॥
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

श्रीमान् वेङ्कटनाथार्यः कवितार्किककेसरी ।
वेदान्ताचार्यवर्यो मे सन्निधत्तां सदा हृदि ॥

சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான்
பாரொன்றச்சொன்ன பழமொழியுள் — ஓரொன்று
தானேயமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப்போமளவும் வாழ்வு.

॥ श्रीगुरुपरंपरासारः ॥



गुरुभ्यस्तद् गुरुभ्यश्च नमोवाकमधीमहे ।
वृणीमहे च तत्राद्यौ दंपती जगतां पती ॥ १ ॥

॥ श्रीः ॥

श्रीमते हयग्रीवाय नमः ॥
श्रीमते लक्ष्मीनृसिंहपरब्रह्मणे नमः ॥
श्रीमते प्रणतार्तिहरवरदपरब्रह्मणे नमः ॥

श्रीमल्लक्ष्मीनृसिंहे कटुतरनिनद त्रस्त विश्वाण्ड उग्रे
वीरे दैत्येन्द्रवक्षो विदळनमुदिते भीषणे विष्णुसंज्ञे ।
भूयाद्भक्तिः परा मे ज्वलति सकलवित् सार्वभौमेऽतिभद्रे
पत्यौ सर्वस्य मृत्योर्मृति कृति विनतानन्दकन्दे मुकुन्दे ॥ १ ॥

वन्दे नृसिंहजायामनादिमायामपोहितुं हेयाम् ।
सुललितसुन्दरकायां सुरेन्द्र गेयां सुरर्षिभिर्ध्येयाम् ॥ २ ॥

वन्दे सूत्रवतीनाथं विष्वक्सेनमहर्निशम् ।
यद्वेत्रचलनात् विघ्ना विद्रवन्ति दिशो दश ॥ ३ ॥

विचित्रां भगवद्भक्तिं रूपिर्णीं रसवाहिनीम् ।
वन्दे वागपरिच्छेद्यां वकुळाभरणाभिधाम् ॥ ४ ॥

नाथयामुनयोगीन्द्र सूक्तीर्हृदि विभावये ।
यदुपज्ञं यतीन्द्रस्य ज्ञानं निस्सीमवैभवम् ॥ ५ ॥

वन्दे यतीन्द्रमनिशं यत्सूक्त्यमृतवाहिनी ।
संसारसर्पसन्दष्ट – जीवजीवातुरद्भुता ॥ ६ ॥

वेदान्तसूरिचरणौ वन्दिषीय मुहुर्मुहुः ।
यद्ध्यानलेशतस्सारशास्त्रभावो मम स्फुटः ॥ ७ ॥

कालेऽस्मिन् श्रीनृसिंहस्स्वपदकमलसंसेवनध्यानपूजा-
योग्यानन्यानदृष्ट्वा रघुवरनयतस्स्वार्चनायाविरासीत् ।
आदिश्रीवण्शठद्विड्यतितनुरिति यस्सम्यगुत्प्रेक्षितोऽभूत्
जीयात्सोऽयं नृकण्ठीरवपदपरिचर्यैकसन्तुष्टचित्तः ॥ ८ ॥

स्तुतिपुळकाङ्कितगात्रम् नृहरेर्बाष्पांबुना लसन्नेत्रम् ।
वन्दे शठरिपुरामावरजमुनीन्द्रं मदीयकुलनाथम् ॥ ९ ॥

दानविनिर्जितकल्पं दयाळुमनघं दमादिगुणपूर्णम् ।
श्रीरङ्गनाथयोगिप्रवरमहं भावये गुरूत्तंसम् ॥ १० ॥

वीररघ्वीट्छठारातियोगिराजं भजेऽनिशम् ।
ज्ञानानुष्ठानवैराग्यवारिधिं मम शेवधिम् ॥ ११ ॥

योऽसावाचार्यभक्तौ मधुरकविरिति प्रोच्यते सर्वलोकैः
विष्णोर्भक्तौ तथा यं कथयति जनता कारिसूनोस्समानम् ।

श्रीभाष्यादिप्रचारे यतिपतिरिरिति यं मेनिरे पण्डिताग्र्याः
सोयं जेजीयतां श्रीनरहरिशठजिद्योगिराजो दयालुः ॥ १२ ॥

लक्ष्मीनृहरिशठद्विड्यतिपतिचरणौ व्रजामि शरणमहम् ।
यत्परिचरणादात्तो ब्रह्मानुभवोऽप्यहो मयाऽत्रैव ॥ १३ ॥

काञ्चनकृष्णाभिख्यां करुणामिव रूपिणीं क्षमामुख्याम् ।
अपि सञ्चरणवर्तीं मे प्रपत्तिविद्यां भजे सदा हृद्याम् ॥ १४ ॥

एवं श्री नृहरेः पदांबुजयुगं ध्यात्वा गुरूणां ततिं
नत्वा तत्र च वेदमौळिगुरुराट्पादांबुजे न्यस्तधीः ।
श्रीरङ्गादिशठारियोगिनृपतिर्व्याख्यां रहस्यत्रयी
सारस्याऽतनुते गिरा सरळया सारार्थसंबोधिनीम् ॥ १५ ॥

काहं मन्दमतिः क्व चातिगहना वेदान्तसूरेर्गिरो
जानन्नेवमहं धिया चपलया व्याख्यातुमिच्छामि ताः ।
क्षन्तव्यं मम साहसं बुधवरैर्नोपेक्षणीया कृति-
स्त्वेषा चाढ्यवरैरिवाल्पकणिका कामं गुणैकस्पृहैः ॥ १६ ॥

व्याख्यानपञ्चकानुक्तो न कोप्यर्थोस्ति यद्यपि ।
तथापि क्रियते व्याख्या वाचां मम विशुद्धये ॥ १७ ॥

अन्योक्तार्थस्य कथनं दोषो यद्यत्र मन्यते ।
आद्येतरस्मिन् व्याख्याने सर्वत्रायं दुरुद्धरः ॥ १८ ॥

क्वचित् किञ्चिद्विशेषेण तत्राश्वासो मतस्तव ।
अत्रापि स भवेदेव ततस्सार्थो ममोद्यमः ॥ १९ ॥

श्रीनृसिंहशठारातियोगिनो नृहरेरपि ।
आज्ञयाऽत्र प्रवृत्तस्य को वा भारो भवेन्मम ॥ २० ॥

लक्ष्मीनृहरिरेवैतद्व्याख्यां स्वप्रीतये स्वयम् ।
लेखिनीस्थानभूतेन मया लिखति सादरम् ॥ २१ ॥

श्रियःபதியாய், अखिल-हेयप्रत्यनीक-कल्याणैकतानனாய், परमकारुणिकனாய்ப் போந்த நாராயணன் ''சென்றுசென்றாகிலுங்கண்டு சன்மம் கழிப்பானெண்ணி ஒன்றி யொன்றியுலகம் படைத்தான்'' என்கிறபடியே ஒரு கல்பத்திற்கு ஒரு ஜீவனாவது தம்மை உள்ளபடி கண்டு உஜ்ஜீவிக்கக்கடவனென்கிற எண்ணத்தாலே அடிக்கடி ஜகத்தை ஸ்ருஷ்டிசெய்து 'यो ब्रह्माणं' என்கிறபடியே ब्रह्माவுக்கு அடியிலேயே वेदोपदेशादि களைப் பண்ணியும், பின்பு तत्तदवसरங்களில் सनकादिகளைக் கொண்டு निवृत्तिधर्मங் களைப் प्रवृत्तिப்பித்தும், नारायण-गीताचार्यरूपेण தானே வெளிநின்று ज्ञानोपदेशங்களைச் செய்தும், இக்கலியுகம் வந்தவாறே, अधिकारि दौर्लभ्यத்தாலே தாம் प्रवर्त्तिப்பித்த कर्म-ज्ञान-भक्तियोग-प्रतिपादक-शास्त्रभागங்கள் பயன்படாமல் போனமையைக் கணிசித்து 'द्वापरस्य युगस्यान्ते आदौ कलियुगस्य च' என்கிறபடி प्रपत्ति-प्रधानமான श्रीपाञ्चरात्रशास्त्रத்தை प्रवर्तिப்பித்து, அதுவும் विस्तृतமாய் विविधप्रकारமாய்ப் போந்ததால் அதிலும் ऋषिप्रायர்களான महामति களுக்கு அன்றி मन्दमतिகளுக்கு प्रयोजनமில்லாமையைக் கருதி தாமே 'வென்றிப் புகழ் திருவேங்கடநாதனென்னும் குருவாய்த்' தூப்புலில் அவதரித்து नाथ-यामुन-यतिवरादिகளாலே प्रवर्तितமான व्यास-सिद्धान्तத்தைப் பல ग्रन्थங்களாலும் பலபடியாக स्थिरप्रतिष्ठितமாக்கி प्रपत्तिயை सपरिकरமாய் साधिकारமாய் மாசற விளக்கும் ''श्रीमद्रहस्य-त्रयसार''மென்னும் महाप्रबन्धத்தை வெளியிட்டருளினான்.

இதில் सकल-वेदान्त-सारतमங்களான रहस्यत्रयங்களின் अर्थं विशदीकரிக்கப்படுகை யாலும், स्मृतीतिहास-पुराण-पञ्चरात्र-दिव्यसूरि-प्रबन्धादिகள் प्रमाणங்களாக उदाहரிக்கப்படுகை யாலும், இதற்கு श्रुतिस्मृत्यादि सर्व सच्छास्त्रங்களோடும் சேர்த்தியுண்டு. मुमुक्षुக்களாய், आकिञ्चन्य-धनिகர்களாய்ப் போந்த நமக்கு सपरिकरமான भक्तियोगத்தை विशदीकரிக்கிற सूत्र-भाष्यादिகளிற்காட்டிலும் सुकरोपायமான प्रपत्तिயின் स्वरूप-परिकराधिकारादिகளை विशदीक ரிக்கிற இப் प्रबन्धமே उपादेयतमம்.

இது ஸரளமான மணி प्रवालநடையிலமைந்திருப்பதாலும், सत्संप्रदायத்தோடு श्रीभाष्यத்தில் चिरपरिचयம் பண்ணின महाप्राज्ञர்களுக்கும் அறியவரிதான अर्थங்களைப் பொதிந்துகொண்டிருப்பதாலும் मन्दप्रज्ञரோடு महाप्राज्ञரோடு வாசியற गुण-ग्राहिகளான सर्वजनங்களாலும் கொண்டாடப்படும் ஓர் अद्भुत-ग्रन्थरत्नம். ஆகையாலிதை चिरकालம் महाभाग्य-लब्ध-सदाचार्यादि शुश्रूषैயாலே सम्यग्ग्रहणம் பண்ணி, बहुधा मननம் பண்ணி, बहुधा प्रवचनம் பண்ணி कृतार्थனானதுமாத்ரமன்றிக்கே இத்தோடு व्याख्यातृत्व-रूपसंबन्धத்தையும் பெற்று कृतार्थனாகக் கருதி இதற்கு व्याख्यानமெழுதுகிறோம். दयतां देशिको मे दयालुः.

இந்த रहस्यत्रयसार-प्रबन्धம் सकल श्रीकोशங்களிலும் गुरुपरंपरासार-पूर्वकமாகவே காணப் படுகையாலும், அதன்றிக்கே இதற்கு स्थितिயும் प्रवचनமும் காணப்படாமையாலும்,

गुरुपरंपरासारத்தில் 'दंपती जगतां पती' என்று துடங்கி 'शेषि-दंपति' என்று தலைக்கட்டுகை யாலும் गुरुपरंपरासारம் रहस्यत्रयसारத்தோடு एक-प्रबन्धமென்பதே संप्रदायம். ஆகையால், गुरुपरंपरासारம் रहस्यत्रयसारத்தின் மங்களஶ்லோகங்களான 'गुरुभ्यः', 'आभगवत्तः' என்கிற ஶ்லோகங் களிற்சொன்ன गुरुपरंपरानुसन्धानத்தின் अवश्यकर्तव्यதையை स्थापिக்கிறதாய்க் கொண்டு तच्छेषतया तदेकीभूतமாயும் 'चिन्तां प्रकृत-सिद्ध्यर्थामुपोद्घातं विदुर्बुधाः' என்கிற लक्षणமிருப்பதால் उपोद्घातविधैயாயும் रहस्यत्रयसारத்தோடு सङ्गतமாகிறது. இப்படி गुरुपरंपरासारம் இதற்கு முந்தர सङ्गतமாகையால் அதற்கே முதலில் व्याख्यानமெழுதுகிறோம்.

प्रारिप्सित-ग्रन्थத்தின் निर्विघ्न-परिसमाप्ति-प्रचयगमनार्थமாய், स्मृत्याचारसिद्धமுமான मङ्गलத்தை शिष्य-शिक्षार्थமாகவும், शिष्यர்களுக்கும் இதின் अनुसन्धानத்தினாலே महिष्ठ-फलावाप्त्यर्थ-மாகவும் ग्रन्थத்தில் निबन्धनம் செய்தருளுகிறார் **''गुरुभ्यः''** என்று. तथा चानुगृहीतं तत्व-टीकायां — ''शिष्याणां शिक्षणं तावत् तेषां स्वकृतकीर्तनात् । महिष्ठ-मङ्गलावाप्तिस्तत्फलं प्रागुदीरितम्'' என்று. இங்கு ''गुरुभ्यः'' என்கிறவிடத்தில் अन्धकारवाचिயான गु शब्दம் प्रयुक्तமானாலும் அது ''गु शब्दस्त्वन्धकारस्स्यात् रुशब्दस्तन्निरोधकः । अन्धकार-निरोधित्वात् गुरुरित्यभिधीयते ॥'' என்கிற प्रमाणத்தில் रु शब्दार्थ-निरोध्यமாகச் சொல்லியிருப்பதால் ''अपहन्तव्य-दुःखोक्तिमप्यारम्भे शुभां विदुः'' என்கிற तत्वटीकानुगृहीत-न्यायத்தாலே निरोध्यान्धकारवाचिயாகையாலே शुभமென்று திருவுள்ளம். இங்கு முதலில் गुरु शब्दம் स्वाचार्यमात्र तात्पर्यகம். அங்கு बहुवचनம் पूजार्थம். இரண்டாவது गुरु शब्दம் तदाचार्य-प्रभृति भगवत्पर्यन्तமாயுள்ள सकलाचार्यपरம். இங்கு गुरुश्च गुरुश्च गुरुश्च गुरवः । तेषां गुरवः- **तद्गुरवः** என்றே विग्रहம் கொள்ள வேண்டும். அன்றிக்கே तेषां गुरुः- तद्गुरुः என்று முதலில் समासं சொல்லி, அதன்மேல் तद्गुरुस्च-तद्गुरुश्च-तद्गुरुश्च-तद्गुरवः என்று एकशेषங்கொள்ளில், ஒரு तद्गुरुशब्दமே शिष्टமாகையால், அதில் घटकமான तच्छब्दம் स्वसहित-गुरु-शब्दोच्यमानार्थத்தை परामर्शिக்கிறதென்பது व्युत्पत्ति विरुद्धம், अन्यथा राज्ञस्तत्पुत्राणां चागमन-विवक्षया राजा तत्पुत्राश्चाऽगताः என்று சொல்வது போல் राज्ञः, तत्पुत्रपौत्राणामागमन-विवक्षयापि राजा, तत्पुत्राश्चाऽगताः என்று प्रामाणिक व्यवहारம் வர प्रसङ्गिக்கும். प्राथमिक गुरु-शब्दமே स्वाचार्य-प्रभृति-भगवानளவுமுள்ள समस्ताचार्यர்களையும் बोधिக்க समर्थமாயிருந்தாலும் (''स चाचार्यवंशो ज्ञेयः । आचार्याणामसावसावित्याभगवत्तः'') என்கிற श्रुत्यर्थத்தை अनुसन्धिத்து तद्गुरुभ्यः என்று अधिकமருளிச்செய்தது. **नमोवाकम्** - नमः என்கிற उक्तिயை, **अधीमहे** - अध्ययनம் செய்கிறோம். नमः என்றிவ்வளவு சொன்னாலும் மங்களம் कृतமாம். ஆனாலும் அப்போது सकृदुच्चरित-न्यायத்தாலே नमस्कारம் மாத்திரமே சொன்னதாம். **नमोवाकमधीमहे** என்றிவ்வளவு சொன்னால் नमश्शब्दத்தின் यावदर्थங் களையும் अनुष्ठिக்கிறோமென்கிற अभिप्रायம் द्योतितமாம் என்று சிலர் சொல்லுவர்கள். नम उक्तिमात्रத்திற்கும் फलाविनाभावம் தோன்றுகைக்காக अधिकोक्ति என்றும் சிலர் சொல்லுவர்கள். नम उक्तिं वदामः என்று धात्वन्तरத்தைச் சொல்லாமல் अधीमहे என்று

சொன்னது உக்திரூபமங்களத்திற்கு भूयस्त्वं தோன்றுகைக்காக. अध्ययनமென்பது पुनः पुनः कथनரூபமாகையாலே अधीमहे என்பதால் नम उक्तिக்கு आवृत्तिதோன்றுமிறே. विघ्न-भूयस्त्व-शङ्कैயுள்ளபோது मङ्गल-भूयस्त्वமும் அபேக்ஷிதமாம். (அங்ஙனன்றிக்கே, वेदाध्ययनம் போலே आचार्य விஷயத்தில் नम उक्तिकथनமும் वैधமென்று தோன்றுகைக்காக என்னவுமாம்.) **तत्र** — तद्गुरु-समुदायः तच्छब्दार्थः. दंपत्यन्वयि-घटकत्वं त्रल् प्रत्ययार्थः । அந்த गुरु-समुदाय-घटकர்களான வென்னபடி. இதனால் तद्गुरुभ्यः என்றவிடத்தில் ஸாமான்ய மாகச் சொன்னவளவன்றிக்கே विशेषतोऽपि दिव्य-दंपतिகளுக்கு गुरुत्वं स्पष्टीकृतமாச்சுது. இப்படி दिव्य-दंपतिகளும் ज्ञानोपदेशादिகளால் आचार्यர்களாகவேயொழிந்தால் प्राप्यवस्तु வேறுண்டோவென்று शङ्कियामைக்காக प्राप्यत्वोपयोगि-गुणங்களையிட்டு அத்दिव्य दंपतिகளையே प्रथक्காகவும் शरणம் புகுகிறார் **आद्या**वित्यादिயாலே. आद्यौ जगताமென்பதை இங்கேயும் அந்வயிப்பது. जगत्कारणभूतர்களானவென்னபடி. இதனால் அத்दंपति-களே ஜகத்திற்குத் தாயுந்தந்தையுமாயிருப்பதால் प्राप्यர்களென்றும் करण-कलेबर-दानादिகளாலே प्रापकர்களென்றும் வெளியிடுகையால் प्राप्यान्तर-शङ्कैக்கு अवकाशமில்லை. இங்ஙனன்றிக்கே **तत्राद्यौ**- அந்த समुदाय-निरूपित-प्रथम-घटकतावन्तौ என்று अर्थங்கொள்வது ஸரியன்று. गुरुपरंपரையில் भगवाனுக்கே प्रथम-घटकत्वமும் பிராட்டிக்கு द्वितीय-घटकत्व-முமே உண்டாகையால் அவ்வர்थம் बाधितமாம். दंपति-शब्द-समभिव्याहृतமான இவ்வाद्य-शब्दம் तृतीयत्वाद्य-समानाधिकरण-घटकतावत्वपरமென்னில் लक्षणाप्रसङ्गம் வரும். நநு பிராட்டிக்கு जगत्कारणत्वங்கூடாமையால் आद्यौ- जगत्कारणभूतர்களென்று சொல்வதும் बाधितமாகா தோவென்னில், न्यायसिद्धाञ्जनादिகளில் ''जगज्जनकत्व-शेषित्व-शरण्यत्व प्राप्यत्वादि-साम्यात्'' इत्यादिகளாலே பிராட்டிக்கும் जगज्जनकत्वத்தையருளிச் செய்திருப்பதால் இவ்வர்थம் बाधितமாகாது. இப்படியாகில் ''यतो वा इमानि''- ''जन्माद्यस्य यतः'' इत्यादिகளிற்சொன்ன ब्रह्मलक्षणம் लक्ष्मिயினிடத்தில் अतिव्याप्तமாகாதோவென்னில், अत्र केचित् — (जगद्धेतुता-स्वरूपयोग्यतैயே) அதாவது – जगज्जन्माद्यनुकूल-शक्तिमत्वरूप-जगद्धेतुत्वமே பிராட்டிக் குண்டென்று श्रीन्यायसिद्धाञ्जनादि श्रीसूक्तिகளுக்குத் तात्पर्यமாகையாலும், कृत्स्न-जगज्जन्माद्य-नुकूल-व्यापारवत्वமே, அதாவது – फलोपधायकत्वरूप-कृत्स्न-जगज्जन्मादि-हेतुत्वமே ब्रह्मलक्षणतया जन्मादि सूत्राभिप्रेतமாகையாலும் ஒருவித दोषத்திற்கும் அவகாஶமில்லை. இப்படி जन्मादि-व्यापारமே ब्रह्मलक्षणतया अभिप्रेतமென்னுமிடம் ''लीलारूप-जगद्व्यापार-लक्षणமாக अनुसन्धेयம்'' என்கிற अर्थपञ्चकाधिकार-श्रीसूक्तिயிலும், जगद्व्यापार-मोक्षप्रदत्वे ब्रह्मलक्षणतया मुक्तेष्विव सर्वेष्वपि न संभवत इति - मितगद्याधिकारश्रीसूक्तिயிலும் मुक्तेषु ब्रह्मलक्षणातिव्याप्तिवारकமான जगद्व्यापार-वर्जमित्यादि सूत्रादिகளிலும் सिद्धம். வேறிடத்திலிதன் विस्तरங்கண்டுகொள்வது'' इति वदन्ति.

वस्तुतस्तु- लक्ष्म्या अपि ब्रह्म-लक्षण-लक्ष्यतया अतिव्याप्तिप्रसक्तेरेवाभावात्-तस्या अपि जगत्कारणत्वं सिद्धम्. न च तस्या अपि न्यायसिद्धाञ्जनाद्युक्तप्रकारेण जगज्जनकत्वमभ्युपगम्य तत् जगज्जन्माद्यनुकूलशक्ति-मत्वरूप-स्वरूपयोग्यत्व-रूपमिति वक्तुं युक्तम्. श्रीपाञ्चरात्रशास्त्रे लक्ष्मीतन्त्रे चतुर्थाद्ध्याये — ''महान्तमाविशत्येतं प्रेरयामि सिसृक्षया। प्रेर्यमाणात्ततस्तस्मादहङ्कारश्च जज्ञिवान्॥ आविश्याहमहंकारं सृष्टये प्रेरयाम्यहम्। स बभूव त्रिधा पूर्वं गुणव्यतिकरात्तदा'' इत्यादिना लक्ष्म्या अपि फलोपधायकत्वरूप-महदादि-समष्टिसृष्टि-जनकत्वस्य स्पष्टमेव प्रतिपादितत्वात्. ஆகையால் பிராட்டிக்கும் फलोपधायकत्वरूप-जगत्कारणत्व கூடுமாகையால் आद्यत्वं बाधितமாகாது.

இத் दंपतिகள் ஜகத்திற்கு कुलाल-मृदादिகள் घटத்திற்குப்போல் காரணம . **पती**
जगज्जन्यातिशयभाக்கான शेषि வேறுண்டோ என்கிற शङ्कैயை निराकरिக் ணத்தில்
என்று. இப்படி शेषित्वमुभयनिष्ठமென்கையால் இம்மிதுனமே மாக पति
उद्देश्यமென்னுமிடம் सूचितமாகிறது. शेषि-दंपति-दया என்கிற விடத்தில்போல்
शब्दத்திற்கு शेषिपरत्वஞ்சொன்னோம். ''पतिं विश्वस्यात्मेश्वरं'' जगத்திற்குக் காரண
இப் पति शब्दம் ईश्वरवाचकமாகவுமாம். அப்போது இச் வென்னில், ईश्वरत्वமும்
மானாலும், இதற்கு नियन्तावान ईश्वरன் வே ப்பிக்கவும், பிராட்டிக்கும்
அவர்களுக்கே என்கிறார். **जगतां पती** इति என் ல विशदம். ரசு படுகையால்
ईश्वरत्वமுண்டென்னுமிடம் अन्यत्र श्रीदेशिक-श्री ச்செய்கிறார் **दंपती** इति. दंपतिகளாகை
जगத்திற்கு बाधकம் வாராதோவென்ன, तदिङ्गितपराधीनனாகவே भगवान् जगन्नियमनादि
யாலே இருவர்களும் एक-मनस्कார்களும் வாராதென்று திருவுள்ளம். **वृणीमहे**-
களைச் செய்கையால் ஒருவி என்று तत्त्वமும், 'वृणीमहे' என்று प्रपत्तिरूपोपायமும்,
शरणत्वेन என்று शेषம். இங்கு धत्व-रूप-शेषित्वेन सिद्धोपायமும் சொல்லப்படுகையால்
'जगतां पती' என்று कैङ्कर्य-पु रुषार्थங்கள் सूचितங்கள்.

இப் प्रबन्धार्थமான तत्व-
ां पती என்கிற இடத்திலேயே चेतनाचेतन-समुदायरूपமான जग-

அன்றிக்கே ன भगवच्छेषत्वமும் षष्ठ्यर्थமாகத் தோன்றுகையால் रहस्यत्रयத்தின்
த்திற்கு स्वरूप स्वरूपोपाय-पुरुषार्थங்கள் ''जगतां पती'', ''वृणीमहे'', என்கிற இவ்வளவிலே
सारार्थங்கள विषयाद्यनुबन्धिचतुष्टयமும் இப் पदங்களிலேயே सुव्यक्तம்.
सूचिता ளென்னவுமாம்.







**பொய்கை முனிபூதத்தார் பேயாழ்வார் தண்**
**பொருநல்வருங்குருகேசன் விட்டுசித்தன்,**
**துய்ய குலசேகரன் நம்பாண நாதன்**
**றெண்டரடிப்பொடி மழிசை வந்தசோதி,**
**வையமெல்லாமறை விளங்கவாள் வேலேந்து**
**மங்கையர் கோனென்றிவர்கண் மகிழ்ந்து பாடுஞ்,**
**செய்யதமிழ் மாலைகளும்தெளிய வோதித்**
**தெளியாதமறை நிலங்கடெளிகின்றோமே. (1)**

सर्वतन्त्र-स्वतन्त्रரான தமக்கும் न्यायोपबृंहणान्तरங்களாலே அறியவரிதான वेदान्तभाग-மும், ''पराशरप्रबन्धादपि वेदान्त-रहस्य-वैशद्य हेतुभूतैः, सद्यः परमात्मनि चित्त-रञ्जकतमैः, सर्वोपजीव्यैरुप-बृंहणैः'' என்று தம்மாலே கொண்டாடப்பெற்ற எவர்களுடைய श्रीसूक्तिகளால் संशय-विपर्ययादिகளற विशदமாச்சுதோ मङ्गल-भूयस्त्वार्थம் அவ்வாழ்வார்களுடைய गुणங்களை யும் திருநாமங்களையும் कीर्तनं பண்ணி அப்प्रबन्धங்களால் தாம் பெற்ற उपकारातिशय-த்தை லோகத்தாரறிய अनुसन्धिக்கிறார்- **பொய்கை** इत्यादिயாலே. பொய்கை என்பது-सरस्. அதிலவதரித்தபடியாலும் सर्वदा भगवन्मननशीलராகையாலும் அவ்வாழ் வாரைப் பொய்கைமுநி என்கிறது. **தண்** - शीतलமான. **பொருநல்**- தாம்ரபர்ணி யில். தாம்ரபர்ணியின் தீரத்திலென்றபடி. **வரும்** - அவதரித்தவரான. தண் பொருநல் வருமென்று लाक्षणिक-प्रयोगத்தால் ஆழ்வாருடைய शीतल-स्वभावத்தையும் पावनतमत्वமும் व्यञ्जितமாகிறது. **குருகேசன்** - குருகாபுரிக்கு நிர்வாஹகரான நம்மாழ்வார். குருகேசனென்னச் செய்தேயும் தாம்ரபர்ணியையிட்டு இவரை நிருபித்தது ''कलौ खलु भविष्यन्ति नारायण परायणाः। ताम्रपर्णी नदी यत्र कृतमाला पयस्विनी ॥ कावेरी च महाभागा प्रतीची च महानदी ॥'' என்று श्रीभागवतத்தில் महर्षि இவ்வாழ்வார் முதலானாரைக் கணிசித்தருளிச் செய்த वचनங்களை स्मरिப்பிக்கைக்காக. **विष्णुचित्तன்** - विष्णुश्चित्ते विष्णौ चित्तं वा यस्येति विग्रहங் கண்டு கொள்வது. இதனால் அவன் இவரைப் பிரியா மையும் இவர் அவனைப் பிரியாமையும் சொல்லப்பட்டது. இங்கு विष्णुचित्त-पदம் तत्परतन्त्रैயான ஆண்டாளுக்கும் உபலக்ஷணம். **துய்ய குலசேகரன்** - பரிஶுத்தரான குலசேகரப்பெருமாள். இவருக்கு பரிஶுத்தியாவது ஸ்ரீராமாயணம் ஸேவிக்கும் श्रीवैष्णवர் முக்தாஹாரத்தை அபஹரித்ததாக अत्यन्तान्तरङ्गர் சொல்ல, श्रीवैष्णवர்கள் அதுசெய்யாரென்று பாம்பின் குடத்தில் கைவிட்டு शपथஞ்செய்கைக்கு ஹேதுவான मनःपरिपाकம். **நம் பாணநாதன்** - திருப்பாணாழ்வாரென்கிற நம்

நாதன். இவ்வாழ்வாரின் அமலனாதிபிரானுக்கு வ்யாக்யாத்ருத்வ-ரூப-ஸம்பந்தத்தாலும், அமலனாதிபிரானிலும், भगवद्ध्यानसोपानத்திலும் பெரிய பெருமாளை ஆபாதசூடம் அனுபவித்தமையாகிற பரஸ்பர ஸாத்ருஶ்யத்தாலும் இவ்வாழ்வாருக்கும் தமக்கும் முனிவாஹனர், வேதாந்தாசார்யர் என்கிற நாமதேயஹேதுவான நம்பெருமாளுடைய க்ருபாவிஷயத்வ-ஸாம்யத்தாலும் நம் பாணநாதனென்று ஸ்வஸம்பந்தத்தை இட்டு இவரையருளிச் செய்தது. **மழிசை வந்த சோதி** - திருமழிசையில் வந்து அவதரித்த ஜ்யோதி ஸ்வரூபரான ஆழ்வார், பெரும் புலியூரில் நடந்த யாகஸதஸ்ஸிலே தீக்ஷிதர் இவருக்கு அக்ரபூஜையை செய்ய, ஶிஶுபால-ப்ராயர்களான சிலர் ஆக்ஷேபிக்க, அப்போது அங்குள்ளார்க்கு ஜ்யோதி-ஸ்வரூபமாக ஸேவை ஸாதித்தாராகையால் இவரை சோதியென்று அருளிச்செய்தார்.

**வையமெல்லாம்** - எல்லா லோகங்களிலும். **மறை**-வேதங்கள். **விளங்க** - ப்ரகாஶிக்கைக்காக. **வாள்** - கத்தியையும், **வேல்** - வேலாயுதத்தையும், **ஏந்தும்** - ஏந்துகிற. அதாவது ஒரு காலத்தில் திருவாலிமணவாளன் கல்யாண கோலத்தோடு எழுந்தருள, இவரும் வாளும் வேலும் ஏந்தி அவருடைய ஸர்வார்த்தையும் அபஹரிக்கப் புக, காலில் இருந்த தங்கப் பீலி கழற்ற முடியாமையாலே இவரும் அதைப் பல்லாலே கவ்வ, ஆஸ்யத்தில் திருவடி ஸம்பந்தித்த அளவிலே ஜ்ஞானம் உதித்து அவ்வாளையும் வேலையும் ஸமித்தாகக் கொண்டு ''समित्पाणिश्श्रोत्रियं'' என்கிறபடி ஸர்வேஶ்வரனை ஆசார்யனாக இவர் வரிக்க, அவர் உபதேஶித்த திருமந்திரத்தினால் ப்ரபுத்தராய் ஸகல லோகங்களிலும் வேதார்த்தங்கள் விஶதமாகும்படி த்ராமிட-காதைகளை அருளிச் செய்தவரான என்றபடி. **மங்கையர்கோன்** - மங்கையென்று இவருடைய நகரத்துக்குப் பெயர். அதிலுள்ளவர்கள் மங்கையர். அவர்களுக்குக் கோன் - நிர்வாஹகரான திருமங்கையாழ்வார். இப்படி ஆழ்வார்களைத் தனித்தனியே அனுஸந்தித்து ஆதராதிஶயத்தாலே திரும்பவும் அவர்களின் திரளை அனுவதிக்கிறார் **என்றிவர்கள்** என்று. மூர்த்திமத்தான க்ருஷ்ண-த்ருஷ்ணா-தத்வமாகக் கொண்டாடப்படுமிவர்கள் என்றபடி. **மகிழ்ந்து** - பகவதனுபவஜனிதமான ஆனந்தத்தால் பரிபூர்ணர்களாய்; **பாடும்** - உள்ளடங்காத அவ் ஆனந்தபரீவாஹமாகப் பாடும். **செய்ய** - ருஜுக்களான மிகவும் ஸரளங்களான என்றபடி. **தமிழ்மாலைகள்** - மாலையைப்போல் ஸர்வேஶ்வரனும் ஶிரஸ்ஸாலே கொண்டாடும்படியான த்ரமிடகாதைகளை. **நாம்** - ''द्रमिडेषु च भूरिशः'' என்று ருஷிகளும் கொண்டாடும்படியான தமிழ்நாட்டிலே, ஸ்ரீவைஷ்ணவ குலத்திலே ஜனிக்கும்படியான பாக்யம் பெற்ற நாம். **தெளியவோதி** - அர்த்தஜ்ஞானத்தோடு விஶதமாக அத்யயனம் பண்ணி. இதற்குத் தெளிகின்றோமே என்பதோடு அன்வயம். **தெளியாத** - இதிஹாஸ-புராணாத்யுபப்ருஹ்மணங்களாலும் மீமாம்ஸாதிகளாலும் ஸம்யங்நிஶ்சிதமாகாத. **மறைநிலங்கள்** - வேதப்ரதேஶங்களை. **தெளிகின்றோமே** - நிஶ்சயிக்கப் பெற்றோம்.

இன்பத்திலிறைஞ்சுதலிலிசையும் பேற்றி
லிகழாத பல்லுறவிலிராகம் மாற்றில்,
தன்பற்றில் வினைவிலக்கிற்றகவோக்கத்திந்
றத்துவத்தை யுணர்த்துதலிற்றன்மையாக்கில்,
அன்பர்க்கே யவதரிக்கு மாயனிற்க
வருமறைகடமிழ் செய்தான் ருளே கொண்டு,
துன்பற்ற மதுரகவி தோன்றக்காட்டுந்
தொல்வழியே நல்வழிகடுணிவார்கட்கே. (2)

---

இதனால் இப்ப்ரபந்தத்தில் வக்ஷ்யமாணார்த்தங்களுக்கு ஸுத்ருட ப்ரமாணமூலத்வமும் மஹான்களின் பரிக்ரஹமும் ஸம்ப்ரதாயாகதத்வமும் ஸூசிதமாகிறது.

இப்படி பகவத் பக்தி வடிவுகொண்டாப்போலுள்ள ஆழ்வார்களின் படிகளை அனுஸந்தித்து, ஆசார்ய-பக்தியே வடிவுகொண்டாப்போலுள்ள மதுரகவியாழ்வாரின் குணானுபவரூபமாகப் பின்னுமொரு மங்களகாதையை அருளிச்செய்கிறார் **இன்பத்தில்** இத்யாதினா. இப்பாட்டில் கண்ணினுண் சிறுத்தாம்பு பத்துப்பாட்டுக்களின் அர்த்தம் அடைவே அனுஸந்திக்கப்படுகிறது.

**இன்பத்தில்** - ஆனந்தரூபமான அனுபவத்தில். இது முதல் பாசுரத்தின் அர்த்தம். இரண்டாம் பாட்டில், "நாவினால் நவிற்றின்பமெய்தினேன்" என்று முதல் பாட்டில் விவக்ஷிதத்தை அனுவதிக்கையால் "அமுதூறும்" என்கிறவிடத்தில் ஆனந்தானுபவ-பர்யந்தம் விவக்ஷிதமென்று திருவுள்ளம். **இறைஞ்சுதலில்** - திருவடிகளை ஆஶ்ரயிப்பதில். இது, "மேவினேனவன் பொன்னடிமெய்ம்மையே" என்பதற்கு அனுவாதம். **இசையும் பேற்றில்** - இசைகை - அங்கீகரிக்கை; **பேறு** - புருஷார்த்தம்; இது "கரியகோல" என்பதற்கு அனுவாதம். இதனால் இரண்டாம் பாட்டில் "தேவுமற்றறியேன்" என்ற இவர், மூன்றாம் பாட்டில் "கரியகோலத் திருவுருக் காண்பன்" என்று பகவதனுபவ-ரூப-புருஷார்த்தத்தில் அங்கீகாரந்தோற்ற அருளிச்செய்தது, தம் புருஷார்த்தமான ஆழ்வாருக்கு அபிமத-புருஷார்த்தமாகையால் என்கிற அப்பாட்டின் ஸாரதமார்த்தம் ஸூசிதமாகிறது. "**இகழாத பல்லுறவில்** - ப்ரச்யவன-ப்ரஸக்தியில்லாத பலபடியான பாந்தவத்தில்; இதனால் "அன்னையாய் அத்தனாய்" என்பது ஸங்க்ருஹீதம்.

**இராகம்மாற்றில்**. இராகம் - அர்த்தத்திலும் ஸ்த்ர்யாதிவிஷயங்களிலும் ஆசை. மாற்றில் - நிவர்த்தனத்தில். இது "நம்பினேன் மடவாரையும் முன்னெலாம்" "அடியேன் சதிர்த்தேனின்றே" என்பதின் ஸங்க்ரஹம்.

**தன்பற்றில்** - தானே தன் संबन्धத்தை உண்டாக்குகையில். இது, ''நின்று தன் புகழ் ஏத்தவருளினான்'' என்பதின் संग्रहம். **வினை விலக்கில்,** வினை - பாபத்தினுடைய, விலக்கில் - निवर्तनத்தில். இது ''பண்டை வல்வினை பாற்றி யருளினான்'' என்பதின் संग्रहोक्ति. **தகவோக்கத்தில்** - कृपाधिक्यத்தில். இது ''அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே'' என்பதைச் சொன்னபடி. **தத்துவத்தையுணர்த்துதலில்** - ''வேதத்தினுட்பொருள் நிற்கப் பாடி என்னெஞ்சுள் நிறுத்தினான்'' என்று சொன்னதைச் சொன்னபடி. வேதாந்த தத்துவங்களை நெஞ்சுள் படுத்துதல் इत्यर्थः. **தன்மையாக்கில்**. தன்மை - स्वभावத்தை, அதாவது कैङ्कर्य-पर्यवसित-भगवद्भागवत-शेषतैक-रसिकதையை. ஆக்கில் - உண்டுபண்ணுவதில். இது ''செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வான்'' என்பதின் संग्रहानुवादம். இவை பத்தும் विषय-सप्तमिகள். இதுகளுக்கு அருமறைகள் என்பதோடு अन्वयம். **அன்பர்க்கே** - भगवत् प्रेमैயையேயிட்டு நிரூபிக்கவேண்டிய साधुக்களுக்கு. இப் பத்துப் பாட்டில் சொன்ன இன்பம் முதலான பத்து உபகாரங்களையும் செய்வதற்காகவே. **அவதரிக்கும்** - அவதரித்தருளுகிற; **ஆயன்** - गोपालன்; **நிற்க** - இருக்கச் செய்தேயும். அவனை अनादरம் செய்து என்று கூட்டிக்கொள்வது. **அரு** - दुर्बोधங்களான. **மறைகள்** - நாலு வேதங்களையும். **தமிழ் செய்தான்** - அதுகளின் ஸாரங்களையெடுத்து நாலு प्रबन्धங்களாகச் செய்தருளின நம்மாழ்வாருடைய. **தாளே** - திருவடிகளையே. एवकारத்தால் கண்ணன் திருவடியை व्यवच्छेदिக்கிறது. **கொண்டு** - अवलंबिத்து. இதனால் ''என்னப்பனில் நண்ணி'' என்பதின் अर्थं सूचितமாகிறது. **துன்பற்ற** - प्रथम-पर्व-निष्ठता-मात्रமாகிற दोषமற்ற. यद्वा, தாளே கொண்டு, என்பதற்கு தோன்றக்காட்டும் என்பதோடே अन्वयம். அப்போது துன்பற்ற என்பதற்கு भ्रम-विप्लवादि-रहितராய் என்று अर्थम्. आप्ततमரான என்றபடி. **மதுரகவி** - प्रथम-द्वितीय-पर्वங்கழிந்து चरम-पर्व-निष्ठராய் आचार्यனையே கவிபாடுகையால் ''மதுர கவி'' என்று பேர்பெற்ற மதுரகவியாழ்வார். **தோன்றக் காட்டும்** - अनुष्ठानத்தாலும், उक्तिயாலும், स्पष्टமாகக் காண்பிக்கும். **தொல்வழியே** - अनादिயான மார்க்கமே, प्राचेतस-पराशरादिகளாலேயும் अनुष्ठानादि-मुखத்தாலே प्रकाशितமான வழியே. **துணிவார்கட்கு** - விஷய–விஜயத்தில் துணிவு உள்ளவர்க்கு. முமுக்ஷுக்களுக்கு என்றபடி. **நல்வழிகள்** - भक्ति-प्रपत्ति-रूपங்களான मोक्षमार्गங்கள். भक्ति-प्रपत्तिகள் आचार्य-समाश्रयणமன்றிக்கே सिद्धिக்காதாகையால் ''आयुर्घृतम्'' என்பதுபோல் அவ்வாचार्य-समाश्रयणத்தை भक्ति-प्रपत्तिகளாக உபசரித்தபடி.

**"पापिष्ठः क्षत्रबन्धुश्च पुण्डरीकश्च पुण्यकृत् । आचार्यवत्तया मुक्तौ तस्मादाचार्यवान् भवेत् ॥" என்று**

---

இப்படி सर्वमुमुक्षुக்களுக்கும் मोक्षार्थं आचार्य-भजनं आवश्यकமென்கிற निर्बन्धமுண்டோ? "कषायपक्तिः कर्माणि ज्ञानन्तु परमा गतिः । कषाये कर्मभिः पक्वे ततो ज्ञानं प्रवर्तते" ॥ என்கிற क्रमத்திலே अतिशयित-पुण्य-विशेषத்தாலேயே भक्तिद्वारा மோக்ஷம் सिद्धियாதோ? வென்கிற शङ्कैயில் स्मृतिवचनத்தால் समाधानம் அருளிச் செய்கிறார் **"पापिष्ठः....என்று"** इति. இது "तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत्", "आचार्यवान्-पुरुषो वेद", इत्यादि श्रुतिகளுக்கும் उपलक्षणம். **पापिष्ठः** - अति-शयित-पापமுள்ளவனான. **क्षत्रबन्धुश्च**- இந்த चकारம் आचार्यवत्तै இருந்தாலும் पापिष्ठ-ருக்கும் मोक्षமுண்டோ? என்கிற शङ्का-निवर्तकம். **पुण्डरीकश्च-पुण्यकृत्** - अतिशयित पुण्यवा-னான पुण्डरीकரும். पापिष्ठः என்பதற்கு प्रतिनिर्देशமாகையால் पुण्यकृत् என்கிற இடத்தி லும் अतिशयित पुण्यம் विवक्षितம். இந்த चकारம் अतिशयित पुण्यवाனுக்கும் मोक्षம் பெற आचार्यवत्तै வேண்டுமோ? என்கிற शंका निवर्तकम्. **आचार्यवत्तया मुक्तौ** - प्रशस्ताचार्य-संबन्ध-த்தாலே मुक्तரானார்கள். இங்கு अतिशायने मतुप्. प्रयोजके तृतीया. இதற்கு मुक्ति-प्रयोजकत्व-மாவது मुक्तिहेतुக்களான भक्ति-प्रपत्तिகளுக்கு हेतुவான शास्त्रज्ञानத்திற்குக் காரணமாகுகை. இப்படி पापिष्ठனான क्षत्रबन्धुவின் பாபமும் मुक्तिக்கு விலக்காகவில்லை; पुण्डरीक-ருடைய अतिशयित पुण्यமும் मुक्तिக்குக் காரணமாகவில்லை; आचार्य-संबन्धத்தாலேயே இருவரும் मुक्तரானார்கள் என்பதால் मुमुक्षु-सामान्यத்திற்கு आचार्यवत्वமே उपादेयतमம் என்கிறார் **'तस्मादाचार्यवान् भवेत्'** என்று. இந்த श्लोकத்தின் मुख्य-तात्पर्यத்தை அருளிச் செய்கிறார் **आचार्यवत्तैயே** इत्यादिना. अवधारणத்தாலே भजनहेतुக்களான अतिशयित-केवल-पुण्यादिகள் व्यवच्छेदिக்கப்படுகிறதுகள். **सर्वருக்கும்** - पापिष्ठனோடு पुण्यतमனோடு வாசியற सर्व मुमुक्षुக்களுக்கும். **मोक्षகாரணமென்று** - पूर्वोक्तरीत्या मोक्ष-प्रयोजकமென்று **அறுதியிட்டார்கள்** - निश्चयिத்தார்கள். महर्षिகள் என்று शेषம். இப்படி सर्वमुमुक्षக்களுக்கும் आचार्यवत्वं வேண்டுமானாலும் "गुरुभ्यः" என்கிற श्लोकத்தில் சொன்னபடி आचार्य-वंशं अनुसन्धेयम् என்பதிலும் அது भगवत्पर्यन्तமாக ஆகவேண்டும் என்பதிலும் प्रमाणமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் "**मुमुक्षुவுக்கு आचार्य-वंशं भगवानளவுஞ் செல்ல अनुसन्धिக்கவேணும் என்று ஓதப்பட்டது**" என்று. இங்கு अनुसन्धान पदं प्रीतिपूर्वक-स्मरणपरம். ஓதப்பட்டது - "स चाचार्यवंशो ज्ञेयः, आचार्याणामसावसावित्याभगवत्तः" என்கிற रहस्याम्नाय श्रुतिயில் சொல்லப்பட்டது. विधिக்கப்பட்டது என்றபடி. गुरूपदेश्य-னான भगवाனுக்கு उपदेष्टृत्व-रूप-गुरुत्वं உண்டோ? "योब्रह्माण"मित्यादियால் உண்டென்று சொல்லப்பட்டாலும் இப்போதுள்ள मुमुक्षु-सामान्यத்திற்கு அந்த चतुर्मुखादि गुरुपारंपर्य-

**आचार्यवत्तையே सर्वருக்கும் मोक्षकारणமென்றறுதியிட்டார்கள். मुमुक्षुவுக்கு आचार्य-वंशம் भगवाனளவுஞ்செல்ல अनुसन्धिக்கவேணுமென்றோதப்பட்டது.**

**''तमिमं सर्वसंपन्नमाचार्यं पितरं गुरुम्'' என்றும், ''ममाप्यखिल लोकानां गुरुर्नारायणो गुरुः'' என்றும், ''त्वमेव बन्धुश्च गुरुस्त्वमेव'' என்றும், ''गुरुरसि गतिश्चासि जगताम्'' என்றுஞ் சொல்லுகிறபடியே सर्वलोकத்துக்கும் परमाचार्यனான सर्वेश्वरன், ब्रह्माவுக்கடியிலே वेदங்களைக் கொடுத்தும், அவற்றிற்கு**

---

மில்லையாகையால் मुमुक्षु-सामान्यத்திற்கு गुरुवंशं भगवानळवु செல்ல अनुसन्धेयமென்று श्रुतिயில் சொன்னது सङ्गतமாகுமோ? என்கிற शङ्कैயில் பல प्रमाणங்களாலே बहुप्रकार-மாக அவனுடைய गुरुत्वத்தை அருளிச்செய்கிறார் **तमिमं** इत्यादिயாலே. இது सभापर्वத்தில் सहदेव-वाक्यம். ''तमिमं सर्वसंपन्नमाचार्यं पितरं गुरुम् । अर्च्यमर्चितुमिच्छामि सर्वेसम्मन्तुमर्हथ ॥'' இதில் तच्छब्दं அப்பொழுது அந்த सभैயில் नारदाद्युपदिष्ट-परत्व-विशिष्टपरं. इमं என்கிற शब्दம் அங்குள்ள सकल-मनुज-नयन-विषयत्वமாகிற सौलभ्यத்தைச் சொல்லுகிறது. सर्व-संपन्नंஎன்கிற पदं अग्रपूजैக்கு अर्हமான समस्त-गुणविशिष्टதையை बोधिக்கிறது. आचार्य पदं ब्रह्मविद्योपदेष्टाவைச் சொல்லுகிறது. गुरु शब्दं वेदाध्यापकपरं. ஆகையால் गुरुशब्दाचार्यशब्द-ங்களுக்கு पौनरुक्त्यமில்லை. அன்றிக்கே ''आचिनोति हि शास्त्रार्थान् आचारे स्थापयत्यपि । स्वयमाचरते यस्मात् तस्मादाचार्य उच्यते ॥'' ''गुशब्दस्त्वन्धकारस्स्यात् रुशब्दस्तन्निरोधकः । अन्धकार निरोधि-त्वात् गुरुरित्यभिधीयते ॥'' என்கிற वचनங்களில் प्रवृत्ति-निमित्त-भेदம் சொல்லப்பட்டிருப் பதால் पौनरुक्त्य-प्रसक्तिயில்லை. இந்த वचनத்தில் சொன்ன आचार्यत्वத்திற்கு आश्रय-னான कृष्णன் நாராயணனென்றும் அதற்கு प्रतिसंबन्धिகள் सकल लोकங்களும் என்றும் स्पष्टமாகைக்காக पुराण-वचनத்தை उदाहरिக்கிறார் **ममापीति**. இது विष्णुपुराणத்தில் भूमि वचनम्. अखिल लोकानां गुरुः नारायणः ममापि गुरुः, என்று अन्वयம். இதில் सर्वलोकத்திற்கும் அவனே आचार्यன் என்கையால் पूर्वोक्त शङ्का निरस्ता.

नारायण-व्यतिरिक्तனுக்கு एतादृश-गुरुत्वமில்லையென்பதில் प्रमाणங்காட்டுகிறார் **''त्वमेव बन्धुश्च गुरुस्त्वमेवेति''**. இதில் अवधारणம் अन्यருக்கு एतादृशगुरुत्वமில்லையென் கிறது. இவ்வர்थं सांप्रदायिकமென்று ज्ञापिக்கைக்காக ஆளவந்தார் श्रीसूक्तिயை उदाहरिக் கிறார் **''गुरुरसि गतिश्चासि जगतां''** इति. இதில் गुरुत्वेन प्रापकत्वमात्रமன்றிக்கே ''गतिश्चासि'' என்று प्राप्यत्वமும் சொல்லப்படுகையால் गुर्वन्तर-वैलक्षण्यமும் सूचितம். எடுத்த वचनங் களின் अर्थத்தை संग्रहिத்து அருளிச்செய்கிறார், **''सर्वलोकத்திற்கும் परमाचार्यனான सर्वेश्वरன்''** என்று. आचार्यனுக்கு पारम्यமாவது परो मा यस्मात् என்கிற व्युत्पत्तिயின்படி

**अपहारம் பிறந்தபோது மீட்டுக்கொடுத்தும், இவன் मुखமாக शास्त्रங்களைப் प्रवर्तिப்பித்தும், இவன் पुत्रர்களான सनत्कुमारादिகளை ''स्वयमागत-विज्ञाना निवृत्तिं धर्ममास्थिताः'' என்னும்படி பண்ணி அவர்கள் मुखங்களாலே हित-प्रवर्तनं பண்ணுவித்தும், இப்படியே மற்றும் नारद-पराशर-शुक-शौनकादि-களான பல महर्षिகளையிட்டு अध्यात्म-संप्रदायங்குலையாதபடி நடத்தியும், ''कृष्णद्वैपायनं व्यासं विद्धि नारायणं प्रभुम् । को ह्यन्यो भुवि मैत्रेय महाभारतकृद्भवेत्'' என்றும், ''महर्षेः कीर्तनात्तस्य भीष्मः प्राञ्जलिरब्रवीत्'' என்றுஞ்சொல்லுகிறபடி நிற்கிற व्यासादिகளை अनुप्रवेशिத்து महाभारत-शारीरकादिகளைப் प्रवर्तिப்பித்தும், हंस-मत्स्य-हयग्रीव-नर-नारायण-गीताचार्याद्यवतारங்களாலே தானே வெளி நின்று तत्वहितங்களைப் प्रकाशिப்பித்தும், தானருளிச் செய்த अर्थங்களையெல்லாம் श्रीभीष्मர் முதலான ज्ञानाधिकரையிட்டு மூதலிப்பித்தும், ''पञ्चरात्रस्य कृत्स्नस्य वक्ता नारायणः स्वयम्'' என்கிறபடியே அடியிலே தானருளிச்செய்த भगवच्छास्त्रத்தை ''ब्राह्मणैः क्षत्रियैर्वैश्यैश्शूद्रैश्च कृतलक्षणैः । अर्चनीयश्च सेव्यश्च नित्ययुक्तैः स्वकर्मसु ॥ सात्वतं विधिमास्थाय गीतस्संकर्षणेन यः । द्वापरस्य युगस्यान्ते आदौ कलियुगस्य च ॥'' என்கிறபடியே अवसरங்களிலே आविष्करித்தும், ''पूर्वोत्पन्नेषु भूतेषु तेषु तेषु कलौ**

---

தனக்கு ஓர் आचार्यன் அற்றிருக்கை. இனி उक्त-प्रमाण-प्रतिपन्नமான आचार्यத்தையை उपपादिக்கைக்காக ज्ञान-प्रदान-प्रकारங்களை அருளிச்செய்கிறார் **ब्रह्मावுக்கு** इत्यादियाल். மேல் இந்த ज्ञानप्रदानं ஸாக்ஷாத்தாகவும், स्वाधिष्ठित-जीवद्वारकமாகவும், स्वनियमित-जीव-द्वारकமாகவும், स्वानुग्रहमात्र-द्वारकமாகவும் நாலுவிதமாய்ச் சொல்லப்படுகிறது; இந்த நாலுவிதமும் तदधीनமாகையால் அவனே सर्वप्रकारத்தாலும் आचार्यனென்பது घट्ट तात्पर्यं. **कृष्णद्वैपायनं व्यासं** - कृष्णद्वैपायनापर नामधेयं व्यासं. **तस्य महर्षेः** - व्यासस्य **कीर्तनात्** निमित्ते पञ्चमी. **''भीष्मः प्राञ्जलिरब्रवीत्''**. இதனால் आचार्य-नामोच्चारणादिகளில் अञ्जलिबन्धं செய்யவேண்டுமென்கிற மஹான்களுடைய आचारம் सूचितமாகிறது. **மூதலிப்பிக்கை** - संवादं செய்விக்கை. இதனால் ईश्वरोपदिष्टार्थங்களிலும் महत्-संवादं உள்ளவையே उपादेयतमं என்கிற अर्थं सूचितम्. **कृतलक्षणैः** - आचार्यकृत-तप्तचक्राङ्कनादि-भगवच्छिह्नैः, कलियुगस्यादौ संकर्षणेन यो गीतः, **सात्वतं** - पाञ्चरात्र-संबन्धिनं, तं **विधिम्** - अनुष्ठानप्रकारं, आस्थाय, अर्चनीय इत्यन्वयः **आस्थाय** - स्वीकृत्य इत्यर्थः. திருநாராயணீயத்தில் उपरिचरोपाख्यानத்தில் कृतयुगத்தில் पाञ्चरात्र-धर्मानुष्ठान-த்தை विशेषமாகச் சொல்லி பிறகு சொல்லப்பட்ட 'संस्थिते नृपतौ तस्मिन् शास्त्रमेतत् सनातनम् । अन्तर्धास्यति' என்கிற वचनத்தில் सनातनमेतच्छास्त्रமென்கையாலும், अन्तर्धास्यति என்கையாலும் **कलियुगस्यादौ गीतः** என்பது पुरातनத்திற்கே पुनराविष्करणमात्रமென்கிற திருவுள்ளத்

**प्रभुः । अनुप्रविश्य कुरुते यत्समीहितमच्युतः ॥'' என்கிறபடியே பராङ्कुश-परकालादि-रूपத்தாலே अभिनवமாகவொரு दशावतारம் பண்ணி मेघங்கள் समुद्रजलத்தை வாங்கி सर्वोपजीव्यமான தண்ணீராக உமிழுமாப்போலே वेदार्थங்களில் வேண்டும் सारतमांशத்தை सर्वருக்குமधिकरिக்கலான भाषैயாலே संग्रहिத்துக் காட்டியும், இப்படித் தான் प्रवर्तिப்பித்த सत्पथத்துக்கு प्रकटராயும் प्रच्छन्न-ராயுமிருந்துள்ள पाषण्डिகளால் उपरोधம் வாராமைக்காக ''साक्षान्नारायणो देवः कृत्वा मर्त्यमयीं तनुम् । मग्नानुद्धरते लोकान् कारुण्याच्छास्त्रपाणिना ॥'' என்றும் ''பீதக வாடைப்பிரானார் பிரமகுருவாகி வந்து'' என்றுஞ்சொல்லுகிற படியே अगस्त्य-सेवितமான देशத்திலே अनेक देशिकापदेशத்தாலே யவதரித்தருளினான்.**

---

தாலே இங்கு ''**அடியிலே தான் அருளிச்செய்த भगवच्छास्त्रத்தை अवसरங்களிலே आविष्कारिத்தும்**'' என்று அருளிச்செய்தது. இதனால் पाञ्चरात्रशास्त्रமும் प्रवाहतोऽनादि என்னுமிடம் सूचितமாகிறது. ''**पूर्वोत्पन्नेष्विति**''. **यत्समीहितं तत् कुरुत** इत्याध्याहृत्यान्वयः. இவ் वचनத்தில் तेषु तेषु என்று सामान्य-निर्देशமிருந்தாலும் இக்கலியில் ஆழ்வார்களே महोपकारம் செய்தமையால் இதை அவர்கள் விஷயமாக்கி அருளிச்செய்தார். ''**अभिनवेति**''- ஜீவன்களை शक्तिविशेषத்தால் अधिष्ठिத்து अतिशयित कार्यங்களைச் செய் வதும் विभव-भेदமாகையால் ஆழ்வார்களை अभिनव-दशावतारமாக அருளிச்செய்தது. இங்கு ''**समुद्रजलத்தை வாங்கி सर्वोपजीव्यமான தண்ணீராக உமிழுமாப்போலே**'' என்கிற दृष्टान्त स्वारस्यத்தாலும், **वेदार्थங்களில் வேண்டும் सारतमांशத்தை सर्वருக்கும் अधिकरिக்கலான भाषैயாலே संग्रहिத்துக் காட்டியும்**'' என்று दार्ष्टान्तिकத்தில் त्रैवर्णिक-पुरुषमात्राधिकारिकமான वेदத்தின் सारार्थங்களை स्त्री-शूद्रादि सर्वजन-सुखग्राह्यமாக்கினமையைச் சொல்லுகையாலும், उत्तरोत्तरातिशयितங்களாய்க் கீழ்ச்சொன்ன दशविध उपकारங்களைக் காட்டிலும் ஆழ்வார்களை अनुप्रवेशिத்துச் செய்த उपकारமே परमोपकारம் என்கிற திரு வுள்ளம் தோன்றுகிறது. இப்படிக் கீழ்ச் சொன்ன ज्ञान-प्रदान-प्रकारங்களெல்லாம் सत्पथத்திற்குப் प्रवर्तनमात्रं என்றும், परपक्ष-प्रतिक्षेप पूर्वकமாகப் பண்ணும் समीचीन-रक्षणं आचार्यापदेशेन अवतरिத்துச் செய்ததே என்றும் அருளிச் செய்கிறார். ''**இப்படித் தான் प्रवर्तिப்பித்த सत्पथத்துக்கு**'' என்று துடங்கி ''**அவதரித்தருளினான்**'' என்னுமளவாலே. **साक्षादिति** 'नारायणो देवः' **मर्त्यमयीम्** - स्वार्थे मयट्. मर्त्य-रूपां तनुं, साक्षात् - जीव-व्यवधान மன்றிக்கே **कृत्वा** - परिगृह्येत्यर्थः. இந்த யோஜனையில் ஆழ்வார்கள் விஷயத்தில் ''पूर्वोत्पन्नेषु'' என்கிற श्लोकத்தை उदाहरिத்து आचार्यविषयத்தில் 'साक्षात्' என்கிற श्लोकத்தை उदाहरिக்கையால் ஆழ்வார்கள் आवेशावतारமென்றும் आचार्यர்கள் साक्षादवतारமென்றும் திருவுள்ளம் द्योतितமாகிறது.

**த்திலே சென்றாலாகையாலே அந்த स्थानविशेषத்தையும் परमपदமென்கிறது. இவ்வனுபவத்துக்காश्रयமாய்க்கொண்டநுभाव्यமாகையாலே भगवद्विभूतिभूतமாய் ज्ञानानन्दलक्षणமான தன் स्वरूपத்தையும் परमपदமென்கிறது. இவை மூன்றுக்கும் மற்றுள்ளவற்றுக்கும் प्राप्यत्वमात्रமविशिष्टம். இப்படி भगवत्स्वरूपगुणविग्रहादिகளும் शुद्धसत्वाश्रयமான नित्यविभूतिயும் स्वस्वरूपமும் भोग्यமானாலும் प्रतिकूलமாக प्रत्यक्षादिप्रमाणसिद्धமாய் मुमुक्षुவுக்கு त्याज्यமாக**

அதையும் गौण्या वृत्त्या परमपद शब्दवाच्यமாகச் சொல்லலாமென்று கருத்து. "तद्धाम परमं मम" என்றும், "द्वितीयं विष्णुसंज्ञस्य योगिध्येयं परं पदं" என்றும் जीवस्वरूपத்திலும் परमपदशब्द-प्रयोगத்திற்கு उपपत्तिயை யருளிச்செய்கிறார் **இவ்வனுபவத்துக்கு आश्रयமாய்க்கொண்டு अनुभाव्यமாகையாலே** इति । இந்த विष्णवाख्यपरमपदानुभवத்திற்கு आश्रयமாகையாலும், "आत्मेति तूपगच्छन्ति" என்கிறபடியே "अहं ब्रह्मास्मि" என்கிற मुक्तिकालिकब्रह्मप्रकारकानुभवத்தில் विशेष्यतया अनुभाव्यமாகையாலுமென்றபடி. **भगवद्विभूतिभूतமாய் ज्ञानानन्दलक्षणமான** इति । இது हेतुगर्भविशेषणம். अचिद्विलक्षणज्ञानानन्दलक्षणविभूतित्वादित्यर्थः । **தன் स्वरूपத்தையும்** – मुक्तனான தன் स्वरूपத்தையும், **परमपदமென்கிறது** इति । जीवस्वरूपம் परमप्राप्यभगवदनुभवाश्रयतया ब्रह्मप्रकारकताद्दशानुभवविशेष्यतया, ज्ञानान्दतया उत्कृष्टतया च गौण्यावृत्त्या परमपदशब्दத்தாலே व्यवहरिக்கப்படுகிறது என்றபடி. இப்படியாகில் परमपदशब्दवाच्यமான இம்மூன்றும் प्राप्यமாய் इतरங்கள் अप्राप्यங்களென்று கொள்ளவேண்டி வாராதோவென்ன வருளிச்செய்கிறார் **இவை மூன்றுக்கும் மற்றுள்ளவற்றுக்கும் प्राप्यत्वमात्रமविशिष्टமிति** । இம் மூன்றுக்குப்போல் மற்றுள்ளவைக்கு परमप्राप्यत्वமில்லாவிடிலும் தினைத்தினையும் விடாளென்றும், "सर्वꣳ ह पश्यः पश्यति" என்றும் विभूतिसामान्यத்திற்கும் अनुभाव्यत्वம் சொல்லுகையால் प्राप्यत्वमात्रத்தை अङ्गीकरिக்கவேண்டுமென்று கருத்து. இப்படி மற்றுள்ளவற்றிற்கும் प्राप्यत्वமविशिष्टமென்று சொன்னது उपपन्नமோ? भोग्यங்களானவையன்றோ प्राप्यங்களாவது, अनुकूलங்களன்றோ भोग्यங்களாவது. இதில் சிலவற்றிற்கு अनुकूलतया भोग्यत्वம் கூடினாலும் लीलाविभूतिயிலுள்ள पदार्थங்கள் कालभेदेन, देशभेदेन, पुरुषभेदेन च प्रतिकूलங்களாய்த் தோற்றுகையால் அவைகளுக்கு अनुकूलत्व, भोग्यत्व, प्राप्यत्वங்கள் கூடுமோவென்று शङ्कித்து उत्तरமருளிச்செய்கிறார் **இப்படி भगवत्-स्वरूपेत्यादिना । भोग्यமானாலுமிति** । अतीन्द्रियतया प्रमाणान्तरविरोधं असंभावितமாகையாலே "रसो वै सः । रसꣳह्येवायं लब्ध्वानन्दी भवती" त्यादिश्रुत्यादिகளில் சொன்னபடி भगवत्स्वरूपादिகளை भोग्यங்களாக ஒப்புக்கொண்டாலுமென்றபடி. **प्रतिकूलமாக प्रत्यक्षादिप्रमाणसिद्धமாயிति** । "न हि दृष्टे अनुपपन्नं नाम" என்கிறபடி प्रातिकूल्यத்தை இல்லை செய்ய முடியாதென்று

**ஶாஸ்த்ரங்களிற்சொல்லப்பட்ட லீலாவிபூதியில் பதார்த்தங்கள் முக்தனுக்கு போக்ய மாகக்கூடுமோ வென்னில் அதிலுங்குறையில்லை. பித்தோபஹதனுக்கு ப்ரதிகூலமான பால் பித்தம் ஶமித்தாலநுகூலமாமாப்போலவும் ஸார்வபௌமனான பிதாவினுடைய சிறைக்கூடம் சிறைகிடக்கிற ராஜகுமாரனுக்கு அப்போது ப்ரதிகூலமாய் ராஜா சிறைக்கூடத்திநின்றும் புறப்படவிட்டுகந்து துல்யபோக னாக வைத்தவளவில் சிறைக்கூடமானது கோப்புக் குலையாதிருக்கச் செய்தே பிதாவின் விபூதியென்றநுகூலமாமாப்போலவும் [4]''यस्त्वया सह स स्वर्गो निरयो यस्त्वया विना'' என்றும் [5]''न हि मे जीवितेनार्थो नैवार्थैर्न च भूषणैः । वसन्त्या-**

கருத்து. **முமுக்ஷுவுக்கு த்யாஜ்யமாக ஶாஸ்த்ரங்களிற்சொல்லப்பட்ட** இதி । இவைகளும் அநுகூலங்களாய் போக்யங்களானால் இவைகளை முமுக்ஷுவுக்கு த்யாஜ்யங்களாக ''ஸர்வதர்மாம்ஶ்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ஶ்ச ஸாக்ஷரான்'' இத்யாதி ஶாஸ்த்ரங்களில் சொல்வது உசிதமாகாதென்று கருத்து. **முக்தனுக்கு போக்யமாகக்கூடுமோவென்னிலி**தி । ஒரு புருஷனுக்கு ப்ரதிகூலமாக ப்ரத்யக்ஷஸித்தமாயிருந்த பதார்த்தம் அவனுக்கு முக்ததஶையில் அநுகூலமாயும், போக்யமாயும் ஆகிற தென்பது புத்திமான்களுக்கு ஹ்ருதயங்கமமாகுமோவென்று ஶங்காபிப்ராயம். **அதிலும் குறையில்லை** இதி । பத்ததஶையிலேயே ப்ரதிகூலமான ஒரே வஸ்து ஒரு புருஷனுக்கே காலதேஶாவஸ்தாபேதத்தால் போக்யமாகக் காண்கையாலே இந்த த்ருஷ்டாந்தமூலமாகவே ஒருவனுக்கே பத்ததஶையில் ப்ரதிகூலங்களெல்லாம் முக்ததஶையில் போக்யங்களாகலாமென்று ஸாதிக்கத் தட்டில்லை யென்றபடி. பத்ததஶையில் பதார்த்தங்களுடைய ஸ்வதஸ்ஸித்தாநுகூல்யம் தோன்றாமல் ப்ராதிகூல்யம் தோற்றுகையிலும், அவனுக்கே முக்ததஶையில் ஸ்வதஸ்ஸித்தாநுகூல்யம் தோற்றுகையிலும் த்ருஷ்டாந்தமருளிச்செய்கிறார் **பித்தோபஹதனுக்கு** இத்யாதிநா । **பித்தம் ஶமித்தாலி**தி । இதனால் அவஸ்தாந்தரம் த்யோதிதம். ஶேஷியான பகவானுடைய விபூதிகளென்று தோன்றாத போது ப்ரதிகூலங்களான வஸ்துக்களெல்லாம், அந்த பகவானுடைய விபூதிகளென்று தெரிந்தால் அநுகூலங்களாமென்பதில் த்விதீயத்ருஷ்டாந்தத்தை அருளிச்செய்கிறார் **ஸார்வபௌமனான பிதாவினுடைய** இத்யாதிநா । **அப்போது** – बन्धकत्वज्ञानदशायां, **சிறைக்கூட மானது கோப்புக் குலையாதிருக்கச் செய்தே** – बन्धकமான ஸந்நிவேஶம் மாறாமல் அப்படியேயிருக்கச்செய்தே. **பிதாவின் விபூதியென்று** – ஶேஷியான பிதாவின் விபூதியென்கிற எண்ணத்தாலே. **அநுகூலமாமாப் போலவுமி**தி । बन्धकत्वबुद्ध्या ப்ரதிகூல மானவையே बन्धம் கழிந்தவாறே ஸ்வஶேஷிவிபூதித்வபுத்த்யா அநுகூலமாகிறாப்போலவு

[4] *ராமாயணம் அயோத்தியாகாண்டம் 30-18.*
[5] *ராமாயணம் ஸுந்தரகாண்டம் 26-5.*

**राक्षसीमध्ये विनारामं महारथम्'' என்றும், ஏறாளுமிறையோனிலுஞ்சொல்லு கிறபடியே भगवत्संश्लेषமின்றிக்கே தான் நின்றபோது कर्मानुरूपமாகத் தனக்கு प्रतिकूलமாயுமल्पानुकूलமாயுந்தோற்றின लीलाविभूतिயில் पदार्थங்கள் मुक्तனாய் निरन्तरभगवदनुभवம் பண்ணுகிறவனுக்கு निरतिशयभोग्यवर्गத்திலே சொருகையுपपन्नம். இப்படி बद्धருக்கு प्रतिकूलமாயுமल्पानुकूलமாயும் कर्म-**

---

மென்றபடி. दार्ष्टान्तिकத்தை उपपादिக்கிறார் **भगवत्संश्लेषமின்றிக்கே தான் நின்ற போது** इत्यादिना । இதனால் दार्ष्टान्तिकத்தில் ராஜகுமாரனுக்கு कारागृहத்தில் स्वपितृ-विभूतित्वज्ञानமில்லாத दशै सूचितம். कारागृह विशेष्यकराजविभूतित्वज्ञानமே ராஜகுமாரனுக்கும் ராஜாவிற்கும் संश्लेषமென்று கருத்து. **कर्मानुरूपமாக** – தான் பண்ணின पुण्यपापानु-रूपமாக. दृष्टान्तத்தில் தான் பண்ணின குற்றத்திற்கனுரூபமாக. **पदार्थங்களி**ति । दृष्टान्तத் தில் कारागृहம் विवक्षितம். **मुक्तனாய்** – सर्वबन्धविनिर्मुक्तனாய், दृष्टान्तத்தில் कारागृह-विनिर्मुक्तனாய் **निरन्तरभगवदनुभवம் பண்ணுகிறவனுக்கு** – निरन्तरभगवदनुभवरूपभगवत्संश्लेषம் பெற்றவனுக்கு. दृष्टान्तத்தில் पितृविभूतित्वज्ञानமுள்ளவனுக்கு. **निरतिशयभोग्यवर्गத்திலே சொருகையுपपन्नமி**ति । कर्मமில்லாமையாலும் उभयविभूतिविशिष्टனான भगवाனை निरन्तरமனுभविக்கையாலும் विभूतिसामान्यத்தில் भगवदीयत्वबुद्धिயானது निरन्तरமாக இருப் பதாலும் முன்பு प्रतिकूलங்களாய்த் தோற்றின வஸ்துக்களெல்லாம் निरतिशयभोग्यங் களாகுகை மிகவும் उपपन्नமென்று கருத்து. இப்படி भगवत्संबन्धिகளான पदार्थங்களை அனுகூலங்களாயும், भगवत्संबन्धिகளல்லாத पदार्थங்களை प्रतिकूलங்களாகவும் எண்ணி னார்களுண்டோவென்ன அதில் प्रमाणமருளிச்செய்கிறார் यस्त्वयेति । இது ராமாயணத் தில் லக்ஷ்மணவசநம். ஓ ராமனே ! **यः** – எந்த தேசமானது, **त्वया सह** – உம்மோடு சேர்ந்ததாக ஆகுமோ, அதாவது தேவரீர் எந்த தேசத்தில் எழுந்தருளியிருக் கின்றதோ, **स स्वर्गः** – அது எவ்வளவு जघन्यமானாலும் எனக்கு स्वर्गतुल्यமாகும். **यो देशः** – எந்த தேசமானது, **त्वया विना** – உம்மைப் பிரிந்ததாகுமோ; அதாவது உம்முடைய सान्निध्यத்தைப் பெறாததோ, **सः निरयः** – அது सर्वोत्कृष्टமானாலும் எனக்கு नरकतुल्यமே என்கை. **न हीति** । जीवितेन नह्यर्थः – அருமந்த प्राणனானாலும் प्रयोजनமில்லை. नैवार्थैरिति । रामसंबन्धமில்லாவிடில் அனுகூலங்களெல்லாம் प्रतिकूलங்களாமென்றபடி. **ஏறாளுமிறையோனிலுஞ்சொல்லுகிறபடியே** – திருவாய்மொழி நான்காவது பத்து எட்டாவது திருவாய்மொழியில் சொல்லுகிற प्रकारம். இதில் முதல் பாட்டில் **மாமாயன்கவராத மணிமாமை குறைவிலமே** என்றும், இரண்டாவதில் **மணி மாயன் கவராத மடநெஞ்சால் குறைவிலமே** என்றும், இப்படியே மேலுள்ள

**बन्धமில்லாதார்க்கநுகூலஸ்வபாவமாயுமிருக்கை அப்பதார்த்தங்களுக்கு भगवदिच्छा-सिद्धம். இப்படி ஸ்வேச்சாஸித்தமான வாநுகூல்யத்தையுடைத்தான தன் प्रकारங்களெல்லாத்தோடுங்கூடின ஸ்ரீமானான நாராயணன் ப்ராப்யனென்னுமிடம் திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் சதுர்த்யந்தபதங்களிலேயபிப்ரேதம். முன்பு சொன்ன கைங்கர்யம் இப்படி பரிபூர்ணாநுபவத்தாலே பிறந்த ப்ரீதி விசேஷத்துக்குப் பரீவாஹமென்**

---

பாட்டுக்களிலும், பகவத்ஸம்பந்தமில்லாத போக்யங்களில் அபேக்ஷையில்லையென்று சொல்லப் பட்டது. நனு லீலாவிபூதியிலுள்ள பதார்த்தங்கள் ஏககாலத்திலேயே பத்தருக்கு ப்ரதிகூலங்களா யும் கர்மபந்தமில்லாதார்க்கு அநுகூலங்களாயுமிருப்பது விருத்தமன்றோவென்ன வருளிச் செய்கிறார் **இப்படி பத்தருக்கு** इत्यादिना । **பத்தருக்கு** – கர்மபந்தமுள்ளவருக்கு. இதனால் லீலாவிபூதியிலுள்ள பதார்த்தங்களில் ப்ராதிகூல்யாதிகள் கர்மோபாதிகங்களாகையால் கர்மஸம்பந்த மில்லாத முக்தர்களுக்கு ஸ்வபாவஸித்தாநுகூல்யபானம் விருத்தமாகாதென்று ஸூசிதம். **அநுகூலஸ்வபாவ மாயுமிதி** । ஆநுகூல்யம் யாவதாத்மபாவியாகையால் ஸ்வாபாவிகமென்று கருத்து. **भगवदिच्छा-सिद्धமிதி** । பத்தருக்கு லீலாவிபூதியிலுள்ள பதார்த்தஸாமாந்யம் ப்ரதிகூலமாயும், அல்பாநுகூலமாயும் இருக்கக் கடவதென்றும், கர்மபந்தமில்லாதார்க்கு அநுகூலமாகவே இருக்கக் கடவ தென்றும் பகவதிச்சாஸித்தமென்றபடி. இப்படி பகவத்ஸங்கல்பமிருப்பதால் ஏககாலத்தில் பின்னபின்னப்ரதிஸம்பந்திகப்ராதிகூல்யாநுகூல்யங்கள் விருத்தங்களாகாதென்று கருத்து. இப்படி ஸர்வ-ப்ரகாரவிசிஷ்டநாராயணனே ப்ராப்யனென்னுமிடம் திருமந்த்ரத்திலும், த்வயத்திலும் நாராயணபதோத்தர-சதுர்த்திகளில் அபிப்ரேதமென்கிறார் **இப்படி ஸ்வேச்சாஸித்தமான** इत्यादिना । **அபிப்ரேதமிதி** । ப்ராப்தி-ரூபபகவதநுபவம் சதுர்த்யர்த்த கைங்கர்யத்திற்குக் காரணமாகையால் கார்யமான கைங்கர்யவாசிகளான சதுர்த்திகளில் காரணமான ப்ராப்திரூபபகவதநுபவம் அபிப்ரேதமென்று கருத்து. சதுர்த்யர்த்தகைங்கர்யம் ப்ராப்தி-ரூபபகவதநுபவஜநிதப்ரீதிகாரிதமாகையால் பகவதநுபவகார்யமென்பதை கத்யத்தில் அருளிச் செய்தாரென்கிறார் **முன்பு சொன்ன** इत्यादिना । **முன்பு சொன்ன** – உத்தரக்ருத்யாதி-காராதிகளில் சொன்ன, இந்த கத்யஸ்ரீஸூக்தியில் பரிபூர்ணப்ரஹ்மாநுபவமே பகவத்ப்ராப்தியென்றும், அங்கு பண்ணும் பகவத்கைங்கர்யங்களெல்லாம் அந்த பரிபூர்ணப்ரஹ்மாநுபவஜநிதப்ரீதிவிசேஷத்தின் பரிவாஹங்களென்றும் அதாவது கடைப்போக்கென்றும் நிஷ்கர்ஷித்திருப்பதால் ப்ராப்திரூபபகவதநுபவத்திற்கும் கைங்கர்யத்திற்கும் கார்யகாரணபாவம் ஸித்திக்கையால் கார்யமான கைங்கர்யவாசி சதுர்த்தியில் காரணமான ப்ராப்திரூபபகவதநுபவம் அபிப்ரேதமாகலாமென்று கருத்து. ச்ருதி யில் ப்ரஹ்மஸம்பத்த்யநந்தரம் ''जक्षत् क्रीडन् रममाणः स्त्रीभिर्वा यानैर्वा, स यदि पितृलोककामो भवति सङ्कल्पादेवास्य पितरस्समुत्थिष्ठन्ति'' என்று ஜக்ஷணாதிபஹுக்ருத்யங்கள் சொல்லியிருக்க கைங்கர்யமொன்றுதான் பகவ-த்ப்ராப்தியின் கார்யமென்று சொல்வது யுக்தமாகுமோ என்கிற சங்கையைப் பரிஹரிக்-

**னுமிடத்தை गद्यத்திலே பலகாலுமருளிச்செய்தார். मुक्तदशैயில் श्रुतिसिद्ध மான जक्षणादिகளும் ज्ञात्यादिसंपादनங்களுமெல்லாம் पुण्यपापरूपकर्मनिरपेक्षभगव-दिच्छानुगुण स्वेच्छामूलங்களாகையாலே कर्मफलமன்றிக்கே अनुभवपरीवाहமான केवलकैङ्कर्यத்திலே अन्तर्भूतங்கள். ஆகையால் प्राप्तियायற்றது यथाभिमतकैङ्कर्यपर्य-न्तपरिपूर्णब्रह्मानुभवமென்றதாயிற்று. இவ்வनुभवமுண்டானால் பின்பொரு காலத்திலுமழியாதென்னுமிடம் [6]"प्राप्यते परमं धाम यतो नावर्तते यतिः, [7]"मामु-पेत्य पुनर्जन्म दुःखालयमशाशस्वतम् । नाप्नुवन्ति महात्मानस्संसिद्धिं परमां गताः ॥ आब्रह्मभुव-नाल्लोकाः पुनरावर्त्तिनोऽर्जुन! । मामुपेत्यतु कौन्तेय! पुनर्जन्म न विद्यते" [8]"यदा स केवली-भूतषड्विंशमनुपश्यति । तदा स सर्वसिद्धत्वात्पुनर्जन्म न विन्दति", [9]"गत्वा गत्वा निवर्तन्ते चन्द्रसूर्यादयो ग्रहाः । अद्यापि न निवर्तन्ते द्वदाशाक्षरचिन्तकाः, [10]"வாயினால் நமோ நாரணாவென்று மத்தகத்திடைக் கைகளைக் கூப்பிப் போயினாற்**

---

கிறார் **मुक्तदशैயிலி**त्यादिना । **संपादनங்களுமெல்லாமி**त्यन्तம் शङ्कोत्थापकம். **कर्मफल மன்றிக்கே अनुभवपरीवाहமான** इत्यादि । श्रुतिயில் सर्वकर्मविनिर्मोकपूर्वकம் ब्रह्मसंपत्तिயைச் சொல்லி, तत्फलமாக परितः ब्रह्मानुभवத்தைச் சொல்லி, तदुपरि जक्षणादिகளைச் சொல்லியிருப்பதால் இவைகள் पुण्यपापकर्मजन्यங்களென்று சொல்வது உசிதமாகாதாகையால் भगवदिच्छा-नुगुणமான स्वेच्छाकार्यங்களாகவும் भगवदनुभवकार्यங்களான कैङ्कर्यங்களாகவுமே ஒப்புக் கொள்ளவேண்டுமாகையால் भगवदनुभवपरीवाहமான कैङ्कर्यமே भगवत्प्राप्तिफलமென்று சொல்லத் தட்டில்லையென்று கருத்து. இவற்றால் फलितத்தவர்த்தை நிஷ்கர்ஷிக் கிறார் **ஆகையாலி**त्यादिना । **प्राप्तियायற்றது** – भगवत्प्राप्तिயாக निर्णயிக்கப்பட்டது. **यथाभिमतेति** । **कैङ्कर्यपर्यन्त** – கைங்கர்யத்தை फलமாக உடைய, இது कर्मफलம் போலன்றிக்கே नित्यமென்கிறார் **இவ்வनुभवமுண்டானாலி**त्यादिना । **प्राप्यत** इत्यादि । **यतिः** – यतनशीलः, ब्रह्मानुभवनिष्ठ इति यावत् । **संसिद्धिं परमां गताः** – समीचीनस्सिद्धिः – संसिद्धिः; परमसंसिद्धिरूपं मां प्राप्ताः । **सः** – मुमुक्षुः, **केवलीभूतः** – प्रकृति वियुक्तः, **षड्विंशं** – श्रुतिயில் "तं षड्विंशमित्याहुः" என்று षड्विंशतत्त्वமாகச் சொல்லப்பட்ட பரமாத்மாவை, **अनुपश्यति** – अर्चिरादिमार्गத்தாலே சென்று ஸாக்ஷாத்கரிக்கிறானோ. **सर्वसिद्धत्वात्** – सर्वप्रकारத்தாலும் सिद्धனாகையால். **வாயினாலி**त्यादि । **நமோநாரணாவென்று** इति । திருவஷ்டாக்ஷரத்தையென்றபடி.

---

[6] *அஹிர்புத்ந்யஸம்ஹிதை 37-26.*
[7] *கீதை 8-15-16.*
[8] *பாரதம் ஶாந்திபர்வம் 323-81.*
[9] *விஷ்ணுபுராணம் 1-6-40.*
[10] *பெரியாழ்வார் திருமொழி 4-5-2.*

**பின்னையித்திசைக்கென்றும் புணைகொடுக்கிலும் போகவொட்டரே'' इत्यादिகளிலே प्रसिद्धம். भगवत्कैङ्कर्यान्तर्गतமான स्वच्छन्दविहारத்தாலே लीलाविभूतिயிலே புகுந்தாலும் இவ்வனுभवத்துக்கு सङ्कोचादिகள் பிறவாமையாலே पुनरावृत्तिயில்லையென்கிறது. இப்படி उत्तरावधिயில்லாதவிவ்வனுभवம் பெறுவார்க்கன்திமशरीरம் देवमनुष्यादिகளிலின்னதென்று தெரியாது. ब्रह्मादिகளுக்கும் मोक्षமுண்டு. அப்படியே [11]''धर्मव्याधादयोऽप्यन्ते पूर्वाभ्यासाज्जु-**

உச்சரித்து इति शेषः । **மத்தகத்திடை** – शिरஸ்ஸின் मद्ध्यத்தில், **கைகளைக் கூப்பி** – अञ्जलिबन्धம் பண்ணி, प्रपत्तिயை अनुष्ठित्தென்றபடி. **போயினால்** – अर्चिरादिमार्गத்தாலே परमपदத்திற்குப் போனால், **பின்னை** – மறுபடியும், **இத்திசைக்கு** – இந்தத் திக்கிற்கு, लीलाविभूतिயில் மறுபடி संसरिக்கைக்கு என்றபடி **என்றும்** – எக்காலத்திலும், **புணைகொடுக்கிலும்** – நான் लीलाविभूतिயில் போய் संसारभोगத்தை स्वल्प-காலம் अनुभविவித்துத் திரும்பவும் வருகிறேன்; அதுவரையில் இவர் प्रतिभूவென்று ஒருவரை प्रतिभूவாக ஏற்பாடுசெய்தாலும் **போகவொட்டார்** – போக விடாரென்றபடி. இப்படியாகில் ब्रह्मप्राप्त्यनन्तरம் ''इमान् लोकान् कामान्नी कामरूप्यनुसञ्चरन्'' என்று प्राकृत-लोकसञ्चारம் சொல்லுகிற श्रुति विरोधம் வாராதோவென்ன पुनरावृत्तिயில்லையென்பதற்கு भावமருளிச்செய்கிறார் **भगवत्कैङ्कर्यान्तर्गतமான** इत्यादिना । **स्वच्छन्दविहारத்தாலே** – कर्मकृतமன்றிக்கெ भगवदिच्छानुगुणமான स्वेच्छाविहारத்தாலே, **लीलाविभूतिயிலே புகுந்தாலும்** – रामकृष्णादिகளைப் போலே लीलाविभूतिயிலே அவதரித்தாலும், **இவ்வனுभवத்துக்கு सङ्कोचादिகளிति** । **இவ்வனுभवம்** – கீழ்ச்சொன்ன परिपूर्णब्रह्मानुभवம். सङ्कोचादीत्यत्रादिशब्दம் अनुभवाभावத்தையும் कैङ्कर्यविच्छेदादिகளையும் संग्रहिக்கிறது. **पुनरावृत्तिயில்லையென் கிறது** इति । मुक्तனுக்கு पुनरावृत्तिயில்லையென்று சொல்லுகிற प्रमाणத்திற்கு मुक्तன் स्वच्छन्दமாய் लीलाविभूतिயில் வருகிறதில்லையென்று தாத்பர்யமில்லை, किन्तु मुक्तனுக்கு लीलाविभूतिயில் कर्माधीनமாக पुनरावृत्तिயில்லை, भगवदिच्छानुगुणமான स्वेच्छैயாலே வருவானாகில் लीलाविभूतिकार्यமான ज्ञानसङ्कोचादिகள் அவனுக்கு வாராதென்பதிலேயே தாத்பர்யமென்றபடி. இப்படிப்பட்ட परिपूर्णब्रह्मानुभवம் निकृष्टजन्मावसानத்திலும் வருமோ? அல்லது निकृष्टजन्मமுடையவனுக்கு उत्कृष्टजन्मத்தையெடுத்து அதின் முடிவிலேயே வரவேண்டுமென்கிற नियमமுண்டோவென்னவருளிச்செய்கிறார் **இப்படி उत्तरावधिயில்லாத இவ்வனுभवமிत्यादिना** । अन्तिमशरीरம் தெரியாது என்பதை उपपादिக்கிறார் **ब्रह्मादिகளுக்குமிत्यादिना । मोक्षமுண்டு** इति । ''ब्रह्मणा सह ते सर्वे संप्राप्ते प्रतिसञ्चरे । परस्यान्ते

[11] *விஷ்ணுதர்மம் 10-2-29.*

**गुप्सिते । वर्णावरत्वे संप्राप्तास्संसिद्धिं श्रमणी यथा'' என்று மஹர்ஷிகள் சொன்னார்கள். ஆகையால் முமுக்ஷுதசையில் ஔபாதிகங்களான வுத்கர்ஷாபகர்ஷங்களைக்கொண்டு முக்ததசையிலுமனுபவதாரதம்யமுண்டென்ற ஆனந்ததீர்த்தீயர் முக்தருக்கெல்லாம் ஸர்வேச்வரனோடே பரமஸாம்யஞ்சொல்லுகிற ச்ருத்யாதிகளை மறந்தார்கள். ஆசார-வைகல்யமுடைய முமுக்ஷுக்களுக்கு ஆனந்தஹ்ராஸமுண்டாமென்று சிலர் சொல்லும் வசனமாப்தமானாலும் முக்தனாவதற்கு முன்னே வரும் பகவதனுபவத்தில் ஸங்கோச**

---

कृतात्मानः प्रविशन्ति परं पदम्'' என்று ப்ரமாணம் சொல்லுகையாலென்றபடி. **அப்படியே** – ஸர்வோத்க்ருஷ்டரான ப்ரஹ்மாவிற்கு மோக்ஷம் கிடைக்கும் ப்ரகாரமே. **धर्मव्याधादय** इत्यादि । **धर्मव्याधः** – வேடஜாதியிலே பிறந்த ஒரு மஹான் । ஆதிபதத்தால் துலாதாரவிதுராதிகளுக்கு க்ரஹணம். **जुगुप्सिते** – மாம்ஸவிக்ரயாதிகளாலே ஜுகுப்ஸிதமாயும், **वर्णापरत्वे सत्वेऽपि** – நான்கு வர்ணங்களுக்கும் கீழ்ப்பட்டதாயுமுள்ள வ்யாதத்வமிருந்தபோதிலும், **पूर्वाभ्यासात्** – த்ரைவர்ணிகமான பூர்வஜன்மத்திலேயே ஆரம்பிக்கப்பட்டு இந்த ஜந்மத்திலும் அனுவ்ருத்தமான பக்தியோகாப்யாஸத்தாலே, **संसिद्धिं प्राप्ताः** – மோக்ஷத்தை யடைந்தார்கள். **श्रमणी यथा** – சபரி என்கிற ஸித்ததாபஸியானவள் மோக்ஷமடைந்த ப்ரகாரமென்கை. **என்று மஹர்ஷிகள் சொன்னார்களிதி** । இப்படி உத்க்ருஷ்டஜந்மமுடைய ப்ரஹ்மாதிகளுக்கும் அபக்ருஷ்டதேஹமுடைய தர்மவ்யாதாதிகளுக்கும் தத்தத்தேஹாவஸானே மோக்ஷமுண்டென்று ப்ரமாணங்கள் சொல்லியிருப்பதால், உத்க்ருஷ்டஜன்மாவஸானத்திலேயோ, அபக்ருஷ்டஜன்மாவஸானத்திலேயோ எதிலே மோக்ஷம் வருமென்பது நிச்சயிக்க முடியாதென்று கருத்து. இப்படி முமுக்ஷுதசையில் ஔபாதிகங்களான உத்கர்ஷாபகர்ஷங்களைக் கொண்டு முக்திதசையிலும் பரமாத்மானுபவதாரதம்யம் சொன்ன ஆனந்ததீர்த்தீயர்களின் மதம் பரமஸாம்யச்ருதியினுடைய விஸ்மரணக்ருதமென்கிறார் **ஆகையாலித்யாதினா** । **ஆகையால்** – அந்திமசரீரம் இன்னதென்று நியமமின்றிக்கே முக்ததசையில் பரிபூர்ணப்ரஹ்மானுபவம் எல்லோருக்கும் ஸமமாகையால் **ஆனந்ததீர்த்தீயர்** – ஆனந்ததீர்த்தரென்பவர் த்வைதமதப்ரவர்த்தகரான ஸூத்ராதி-பாஷ்யகர்த்தா । தச்சிஷ்யாதிகள் ஆனந்ததீர்த்தீயர். பரமஸாம்யம் சொல்லுகிற ச்ருதியாவது ''निरञ्जनः परमं साम्यमुपैति'' என்பது. ஆதிபதத்தால் ''मम साधर्म्यमागताः'' என்கிற ஸ்ம்ருதியும், ''भोगमात्र-साम्यलिङ्गाच्च'' என்கிற ஸூத்ரமும் விவக்ஷிதம். இனி ஆப்தர் சொல்லும் ஆனந்ததாரதம்யவசனமன்யபரமென்கிறார் **ஆசாரவைகல்யமித்யாதினா** । ஆசாரவைகல்யமுடைய முமுக்ஷுக்களுக்கு ஆனந்தஹ்ராஸமுண்டாம் என்கிற பர்யந்தம் ஆப்தவசனம். **சிலர்** – ஸ்ரீராமானுஜமதஸ்தரான சிலர். **ஆப்தமானாலும்** – யதார்த்தவக்த்ருகர்த்ருகதயா யதார்த்தமானாலும் என்றபடி. இந்த வசனத்திற்கு அன்யபரதையை உபபாதிக்கிறார் **முக்தராவதற்கு முன்னே வரும் பகவதனுபவத்திலிதி** । அந்த ஆப்தவசனத்தில் ஸாமான்யமாக முமுக்ஷுக்களுக்கு ஆனந்தஹ்ராஸமுண்டாமென்று சொல்லியிருக்கிறதேயொழிய,

**த்தைச் சொல்லிற்றாமத்தனை. பிற்பட முக்தரானார்க்கும் நாளிழவே போக்கிப் பொருளிழவில்லை. ஸ்ரீவிஷ்ணுலோகாதிகளிலே ஸாலோக்யஸாரூப்யாதி மாத்ரம் பெற்றார்க்கு முக்தவ்யபதேஶம் அதூரவிப்ரகர்ஷத்தாலேயாமத்தனை. இவ்வர்த்தம் [12]"लोकेषु विष्णोर्निवसन्ति केचित् समीपमृच्छन्ति च केचिदन्ये । अन्ये तु रूपं सदृशं भजन्ते सायुज्यमन्ये स तु मोक्ष उक्तः" என்று நியமிக்கையாலே ஸித்தம். இது பரமபதத்திலே**

முமுக்ஷுதஶையிலா அல்லது முக்ததஶையிலா என்று பிரித்துச் சொல்லாமையால் பரமஸாம்யஶ்ருத்ய-விரோதேன முக்தனாவதற்கு முன்பு அதாவது – முமுக்ஷுதஶையில் வரும் பகவதனுபவத்தில் ஸங்கோசம் வருகிறதென்று நிர்வஹிக்கலாமென்று கருத்து. ஆனாலும் பூர்வகாலத்தில் முக்தரான வர்க்கு இப்பொழுது முக்தராகுவரைக்காட்டிலும் ஆனந்தமதிகமன்றோ வென்ன வருளிச்செய்கிறார் **பிற்பட**ேதி । **நாளிழவே போக்கிப்பொருளிழிவில்லை** இதி । அனுபவகாலாம்ஶத்தில் ந்யூனாதிகபாவமிருந்தாலும் ப்ரமேயத்வவ்யாபகானுகூலத்வப்ரகாரகானுபவரூபமான ஆனந்த-ஸ்வரூபத்தில் தாரதம்யமில்லை யென்று கருத்து. ஸ்ரீவிஷ்ணுலோகாதிகளிலே உபாஸகாதிகாரிபேதத் தாலே ஸாலோக்யஸாமீப்யஸாரூப்யங்களைப் பெற்றவர்களுக்கும் முக்தவ்யபதேஶமுண்டு. அவர் களுக்கு ஆனந்ததாரதம்யமுண்டென்பது ஸர்வஸம்மதம். அப்படியிருக்க முக்தர்களுக்கெல்லாம் ஆனந்ததாரதம்யமில்லையென்று சொல்லலாமோ வென்ன? அவர்கள் ஸாக்ஷான்முக்தர்களன்று; ஆனால் முக்தவ்யபதேஶம் தூரவிப்ரகர்ஷாபாவத்தாலே என்கிறார் **ஸ்ரீவிஷ்ணுலோகாதிகளிலே** इत्यादिना । ஆதிபதத்தால் श्वेतद्वीपादिपरिग्रहः । இப்படி நியமிக்கக்கூடுமோ வென்ன? இது ப்ரமாணஸித்த மென்கிறார் **இவ்வர்த்த**मित्यादिना । **लोकेष्वि**त्यादि । केचित् लोकेषु निवसन्ति, अन्ये केचित् விஷ்ணுவினு டைய ஸமீபவாஸகாமனையினாலே உபாஸனம் பண்ணினவர்கள். **समीपमृच्छन्ति** – விஷ்ணு வினுடைய ஸமீபத்தை யடைகிறார்கள். **अन्ये तु** – ஸாரூப்யகாமனையினாலே உபாஸனம் பண்ணினவர்கள், **सदृशं रूपं भजन्ते** – விஷ்ணுவோடு ஸத்ருஶமான ஆபரணாயுதாதிமத்தான ரூபத்தை யடைகிறார்கள். **अन्ये तु** – பரமபதப்ராப்திகாமனையினாலே உபாஸனம் பண்ணின பாக்யஶாலிகளான சிலர், பரமபதத்தைப் பெற்று, **सायुज्यं भजन्ते** – ஸமானபோகத்வரூபமான ஸாயு-ஜ்யத்தை அடைகிறார்கள். **स तु** – அந்த ஸாயுஜ்யப்ராப்தியே, இங்கு तु ஶப்தத்தால் அவதாரணம் விவக்ஷிதம். "तु स्यात् भेदेऽवधारणे" என்று நிகண்டு: । இதனால் ஸாலோக்யஸாமீப்யஸாரூப்யாதி களுக்கு ஸாக்ஷான்மோக்ஷத்வம் வ்யவச்சேதிக்கப்படுகிறது. **என்று நியமிக்கையாலே ஸித்த**मिति । இந்த வசனம் स तु मोक्षः என்று ஸாயுஜ்யத்தையே முக்யமோக்ஷமாக நியமிக்கையால் इतरत्र மோக்ஷ-வ்யபதேஶம் கௌணமாகையால் கௌணமோக்ஷம் பெற்றவர்களுக்கு ஆனந்ததாரதம்யமிருந்தாலும் ஸாயுஜ்யம் பெற்ற முக்யர்களான முக்தர்களுக்கு கீழ்ச்சொன்ன ஆனந்ததாரதம்யாபாவம் ஸுஸ்திர

12 *ஸ்ரீபாகவதம் (?)*

**சென்றால் வரும் ஸாயுஜ்யமே மோக்ஷமென்கிறது. அதுக்குள்ளே ஸஹஸ்ரத்தில் ஶதாதிகளைப்போலே ஸாலோக்யாதிகளெல்லாமந்தர்பூதங்களாகையால் அங்கொருவர்க்கும் வைஷம்யமில்லை, [13]"मोक्षं सालोक्यसारूप्यं प्रार्थये न कदाचन । इच्छाम्यहं महाबाहो सायुज्यं तव सुव्रत" என்கிறவிடத்திலுமிவ்வர்த்தங்கண்டு கொள்வது. ஸாயுஜ்யமாவது ஸயுக்கினுடைய பாவம். ஸயுக்காவானொரு போக்யத்திலே போக்தாவாய்க்கொண்டு கூடவன்வயிக்குமவன். இங்கு ஸப்ரகாரப்ரஹ்மமாகிற போக்யத்**

மென்று கருத்து. நனு "लोकेषु विष्णोः" என்கிற ஶ்லோகத்தில் ஸாலோக்யஸாமீப்யஸாரூப்யஸாயுஜ்யங்களை பின்னபின்னங்களாகச் சொல்லி யிருப்பதால் ஸாயுஜ்யத்தை யடைந்தவர்க்கும் ஸாலோக்யாதிகளில்லாமையால் ஆனந்தபூர்த்தியெங்ஙனேயென்ன வருளிச்செய்கிறார் **இது பரமபதத்திலே சென்றால் வரும் ஸாயுஜ்யமே மோக்ஷமென்கிறது** இதி । **இது** – லோகேஷு விஷ்ணோ: என்கிற ஶ்லோகம், **பரமபதத்திலே சென்றால்** – க்ஷீராப்திஶ்வேதத்வீபாதிகள் போலன்றிக்கே தமஸ:பரமாய் தத்விஷ்ணோ: பரமம் பதம் என்றோதப்பட்ட அப்ராக்ருதமான பரமபதத்திலே சென்றால், **வரும் ஸாயுஜ்யமே** – தத்தேஶாவச்சேதேன இவனுக்கு வரும் ஸமானபோகத்வமே, **மோக்ஷமென்கிறது** – இதரவ்யவச்சேதேன முக்யமோக்ஷமென்று சொல்லுகிறது. இதனால் பரிஹாரம் வந்தபடி எங்ஙனேயென்ன வருளிச்செய்கிறார் **அதுக்குள்ளே** இத்யாதினா । **அதுக்குள்ளே** – பரமபதமான விஷ்ணுலோகத்தில் திருமாமணிமண்டபத்திலிருக்கும் பகவானுடைய ஸமீபத்தில் ஸாரூப்யாதி பூர்வகமாகவே வரும் ஸாயுஜ்யத்துக்குள்ளே, **ஸாலோக்யாதிகளெல்லாம் அந்தர்பூதங்களி**தி । அங்கு வரும் ஸாயுஜ்யம் ஸாலோக்யாதிகளில்லாமல் வாராதென்றபடி. இதில் த்ருஷ்டாந்தமருளிச் செய்கிறார் **ஸஹஸ்ரத்தில் ஶதாதிகளைப்போலே** இதி । **ஆகையால்** – இந்த ஶ்லோகத்தில் சொன்ன ஸாயுஜ்யம் ஸாலோக்யாதிகர்பமாகையால், **அங்கொருவருக்கும்** – பரமபதம் சென்று ஸாயுஜ்யத்தை யடைந்த ஒருவருக்கும், **வைஷம்யமில்லை** – போகத்தில் பரமஸாம்யமே யுள்ளதே யொழிய தாரதம்யமில்லையென்று கருத்து. லோகேஷு விஷ்ணோ: என்கிற ஶ்லோகத்தில் ஸாயுஜ்யம் முக்யமோக்ஷமென்று சொன்னதற்கு உபோத்பலகமான ப்ரமாணத்தைக்காட்டுகிறார் **மோக்ஷமித்யாதினா** । **இவ்வர்த்தம் கண்டுகொள்வது** – இந்த ஶ்லோகத்தில் இதரநிஷேதபூர்வகம் ஸாயுஜ்யத்தையே அபேக்ஷித்தபடியால் ஸாலோக்யாதிகளில் மோக்ஷஶப்தப்ரயோகம் அதூரவிப்ரகர்ஷத்தாலே ஔபசாரிகமென்கிற இவ்வர்த்தத்தை நிஶ்சயித்துக்கொள்வது. இனி ஸாயுஜ்யஶப்தார்த்தத்தை நிஷ்கர்ஷிக்கிறார் **ஸாயுஜ்யமாவது** இத்யாதினா । ஸயுஜோ பாவ: ஸாயுஜ்யமென்று ஸயுக் ஶப்தத்தின்பேரில் பாவப்ரத்யயத்தாலே ஏற்பட்ட ஸாயுஜ்ய ஶப்தத்திற்கு த்ராமிடபாஷையாலே விவரணம் ஸயுக்கினுடைய பாவமிதி ।

---

[13] *2-து ஜிதந்தாஸ்தோத்திரம் 36.*

**திலே ब्रह्मமும் முக்தனுங்கூட भोक्ताக்களாயன்வயிக்கையாலே முக்தனை ஸயுக் கென்கிறது. இப்படியாகில் श्रुतियில் सायुज्यशब्दமும் सार्ष्टिताशब्दமும் சேர प्रयोगिப்பானேனென்னில்; सायुज्यमुभयोरत्र भोक्तव्यस्याविशिष्टता । सार्ष्टिता तत्र भोगस्य तारतम्यविहीनता ॥ முக்தனுக்கு जगद्व्यापारமில்லையேயாகிலும் कृषिபண்ணின पिताவும் निर्व्यापारரான पुत्रादिகளும் कृषिफलத்தை भुजिக்குமாப்போலே जगद्व्या-पारத்தால் வரும் रसம் व्यापरिக்கிற ஶ்வரனுக்கும் பார்த்திருக்கிற முக்தனுக்கும்**

---

सयुक्छब्दार्थத்தை வெளியிடுகிறார் **ஸயுக்காவானி**त्यादियाल். सामान्यமாகச் சொன்ன अर्थத்தை प्रकृतविषयத்தில் विशेषिத்துக்காட்டுகிறார் **இங்கு सप्रकारब्रह्मமாகிற भोग्यத்திலே** इति । **सप्रकारம்** – सविशेषणம், उभयविभूतिविशिष्टमिति यावत् । **ब्रह्मமாகிற भोग्यத்திலே** – ब्रह्मமாகிற अनुभाव्यத்திலே, **ब्रह्मமும் முக்தனும் கூட भोक्ताக்களாய் அன்வயிக்கையாலே** इति । ब्रह्मமானது सर्वप्रकारविशिष्टனான தன்னை अनुकूलமாக எப்படி अनुभविக்கிறதோ அப்படியே முக்தனும் उभयविभूतिविशिष्टமான ब्रह्मத்தை अनुकूलமாகவே अनुभविக்கையால், **முக்தனை ஸயுக் என்கிறது** – ब्रह्मத்தோடே समान भोगवाனென்கிறது. இப்படி सायुज्य-शब्दம் समानभोगत्वத்தைச் சொன்னால் ''सायुज्यஂ सार्ष्टिताஂ समानलोकतामाप्नोति'' என்கிற श्रुतियில் सार्ष्टिताशब्दத்தோடு सायुज्यशब्दप्रयोगம் पुनरुक्तமாகாதோ வென்கிற शङ्कैயை उत्था-पनம் பண்ணி இரண்டும் भिन्नार्थकமாகையால் पौनरुक्त्यமில்லை யென்று परिहरिக்கிறார் **இப்படியாகில் श्रुतियில் सायुज्यशब्दமும் सार्ष्टिताशब्दமும் சேர प्रयोगिப்பானேனென் னிலீ**त्यादिना । **सायुज्यमिति** । **उभयोः** – இரண்டுபேர்களுக்கு, **भोक्तव्यस्याविशिष्टता** – भोग्यसाधारण्यமானது, **अत्र** – இந்த श्रुतियில், **सायुज्यं** – सायुज्यமென்று சொல்லப்படுகிறது. **तत्र** – அவ்விரண்டுபேர்களுக்குள்ளே, **भोगस्य** – अनुभवத்திற்கு, **तारतम्यविहीनता** – तारतम्यமில்லாமை, அதாவது अत्यन्तसाम्यம். **सार्ष्टिता** – सार्ष्टिताशब्दवाच्यம். रोग्यरोगियான இருவர்களுக்கு भक्ष्यवस्तु समமாயிருந்தாலும் रोगियானவன் अरोगिயைப்போல் भोक्तुं न शक्नोति । அப்போது அவர்களுக்கு भोगத்தில் तारतम्यமுண்டு. அது போலன்றிக்கே अरोगियான இருவர்கள் ஒரு भक्ष्यवस्तुவிற்கு भोक्ताக்களானல் அவர்களுக்கு भोगத்தில் तारतम्यமிராது. அந்த तारतम्यமில்லாமையை सार्ष्टिताशब्दம் சொல்லும். அப்படியே सर्वप्रकारविशिष्ट ब्रह्मानन्दानुभवத்தில் ब्रह्मத்திற்கும் முக்தனுக்கும் तारतम्यமில்லாமையால் அங்கு सार्ष्टिताशब्दம். तथाच सायुज्यशब्दம் இரண்டுபேர்களுக்கும் भोग्यமொன்று என்கிறது. सार्ष्टिताशब्दம் இரண்டுபேர்களுடைய भोगத்திற்கும் तरतमभावமில்லையென்கிறது. ஆகையால் भिन्नार्थकமான இரண்டு शब्दங்களுக்கு सहप्रयोगங்கூடுமென்று கருத்து. முக்தனுக்கு जगद्व्यापारமில்லாமலிருக்க जगद्व्यापारம் பண்ணும் ब्रह्मத்தோடு भोगसाम्यம்

**तुल्यम். सूत्रकारரும் [14]''जगद्व्यापारवर्जं'' என்று துடங்கி [15]''भोगमात्रसाम्यलिङ्गाच्च'' என்றருளிச்செய்தார். [16]''सामरस्यं हि सायुज्यं वदन्ति ब्रह्मवादिनः'' என்று शाकटायनனும் சொன்னான். शब्दशक्तियின்றிக்கேயிருக்க भेदश्रुतिகளும் विरोधिக்க सायुज्यशब्दத்துக்கு ऐक्यம் பொருளாக நினைத்திருப்பார்க்கு मुक्तன் परम-साम्यத்தை அடையுமென்றும் तादृक्காமென்றுஞ்சொல்லுகிற श्रुतिகளும் विरोधिக்கும். [17]''मम साधर्म्यमागताः'' என்று गीताचार्यனுமருளிச்செய்தான்.**

---

கூடுமோ வென்ன? दृष्टान्तத்தைக்காட்டி समाधानமருளிச்செய்கிறார் **मुक्तனுக்கீत्यादिना ।** **जगद्व्यापारத்தால் வரும் रसम्** – जगत्सृष्टिस्थितिसंहाररूपव्यापारத்தாலே உண்டாகும் प्रीति-विशेषம், जगद्व्यापारமில்லாவிட்டாலும் मुक्तனுக்கு भोगमात्रத்தில் साम्यமுண்டென்பது सूत्रकारसंमतமென்கிறார் **सूत्रकारருமीत्यादिना ।** **जगद्व्यापारवर्जம்** – जगद्व्यापारं वर्जयित्वा, **भोगमात्र-साम्यलिङ्गाच्चेति ।** जगद्व्यापारानुभवजन्य प्रीतिरूपभोगमात्रத்தில் मुक्तனுக்கு भोगसाम्यமுண்டு. ''सोऽश्नुते सर्वान् कामान् सह, ब्रह्मणा विपश्चिता'' என்று ''सर्वकामानुभवरूपलिङ्ग सद्भावात्'' என்று सूत्रங்களினர்थம். भोगसाम्यமே सायुज्यமென்பதில் शब्दार्थवित्तमரான शाकटायनருடைய निरुक्तियைக்காட்டு கிறார் **सामरस्यं हीत्यादिना ।** समः रसः भोगः यस्य सः समरसः तस्य भावः सामरस्यम् । हि प्रसिद्धौ, **ब्रह्मवादिनः** – वेदान्तिகள், **वदन्ति** – भोगवाचकयुक् शब्दस्थानத்தில் रसशब्दத்தை प्रयोगिத்து सामरस्यத்தையே அதாவது समानभोगत्वத்தையே सायुज्यமாக वेदान्तवित्துக்கள் சொல்லுகிறார்களென்ற படி. सायुज्यशब्दத்திற்கு ब्रह्मजीवयोः स्वरूपैक्यम् अर्थ மென்று சொல்லுகிறவர்களுடைய पक्षத்தை निरसिக்கிறார் **शब्दशक्तियன்றிக்கேயிருக்க** इत्यादिना । **शब्दशक्तियன்றிக்கேயிருக்க** – सायुज्यशब्दம் स्वरूपैक्यத்திலே शक्तமில்லாமலிருக்க, இதனால் सायुज्यशब्दம் தனக்கு शक्यமில்லாத जीवब्रह्मस्वरूपैक्यத்தைச் சொல்லுமாகில் घटशब्दமும் தனக்கு शक्यமில்லாத पटத்தைச் சொல்ல प्रसङ्गिக்குமென்கிற अनिष्टप्रसङ्गமभिप्रेतம். **भेदश्रुतिகளும் विरोधिக்க** इति । भेदश्रुतिகளாவன — ''पृथगात्मानं प्रेरितारञ्च मत्वा'' ''तयोरन्यः पिप्पलं स्वाद्वत्ति'' ''नित्यो नित्यानां........................एको बहूनां यो विदधाति कामान्'' इत्यादि । இதனால் सायुज्य-शब्दத்திற்கு जीवब्रह्मस्वरूपैक्यம் अर्थமென்று எண்ணினால் भेदश्रुतिகள் बाधितங்களாக வேண்டிவருமென்கிற श्रुत्यर्थापत्ति अभिप्रेतம். **நினைத்திருப்பார்க்கு** इति । இதனால் அவர்களுடைய நினைவிற்குக் காரணம் दुर्ज्ञेयமென்றதாயிற்று. அந்த நினைவு श्रुतिविरुद्धமென்கிறார் **मुक्तனीत्यादिना ।** **श्रुतिகளும்** – ''निरञ्जनः परमं साम्यमुपैति'' ''यथोदकं शुद्धे

---

[14] ப்ரஹ்மஸூத்ரம் 4-4-17.
[15] ப்ரஹ்மஸூத்ரம் 4-4-21.
[16] ஶாகடாயனன்.
[17] கீதை 14-2.

**இவ்வர்த்தை** [18]''परेण परधर्मी च भवत्येष समेत्यवै । विशुद्धधर्मा शुद्धेन बुद्धेन च स बुद्धिमान् ॥ विमुक्तधर्मामुक्तेन समेत्यभरतर्षभ! । वियोगधर्मणा चैव वियोगात्मा भवत्यपि ॥ विमोक्षिणा विमोक्षी च समेत्येह तथा भवेत् । शुचिकर्मणा शुचिश्चैष भवत्यमितदीप्तिमान् ॥ विमलात्मा च भवति समेत्य विमलात्मना । केवलात्मा तथा चैषः केवलेन समेत्य वै ॥ स्वतन्त्रश्च स्वतन्त्रेणस्वतन्त्रत्वमुपाश्नुते । एतावदेतत्कथितं मया ते तथ्यं महाराज! यथार्थतत्वम् । अमत्सरस्त्वं प्रतिगृह्य चार्थं सनातनं ब्रह्म विशुद्धमाद्यम्'' *என்று* वसिष्ठकराळसंवाद*த்தில் பரக்கப்*

शुद्धमासिक्तं तादृगेव भवति'' ''एवं मुनेर्विजानत आत्मा भवति गौतम'' इत्यादिश्रुतिகளும், **विरोधिக்கும்** – साम्यமும் तादृक्त्वமும் भेदघटितமாகையாலே स्वरूपैक्यத்தோடு विरोधिக்குமென்றபடி. गीतास्मृतिविरोधமும் வருமென்கிறார் **मम साधर्म्यमागता** इत्यादिना ।

साधर्म्यமே सायुज्यशब्दार्थமென்பதில் मोक्षधर्मத்திலுள்ள वसिष्ठकराळसंवादवचनங்களும் प्रमाणமென்கிறார் **இவ்வர்த்தைய**ीत्यादिना । **परेणेति** । **एषः** – मुक्तः, **परेण** – परब्रह्मத்தோடு, **समेत्य** – संश्लेषத்தையடைந்து, परब्रह्मத்தை अनुभविத்து என்றபடி. परधर्मी च – परस्य ये धर्माः, तत्सदृशधर्मवान् भवतीत्यर्थः । இப்படி सामान्यமாக प्रतिज्ञातமான समानधर्मवत्वத்தை विशेषतः व्यपदेशिக்கிறார் **विशुद्धधर्मा शुद्धेने**त्यादिना । एष इत्यनुषज्यते । **एषः** – मुक्तः, **शुद्धेन** – कर्मसंबन्धशून्येन ब्रह्मणा, **समेत्य** – अनुभवरूपसंबन्धத்தாலே संश्लेषिத்து, **विशुद्धधर्मा भवति** – कर्मसंबन्धराहित्यरूपविशुद्धधर्मवान् भवति । **सः** – मुक्तः, **बुद्धेन** – सर्वज्ञனான भगவானோடு, **समेत्य** – संश्लेषिத்து, **बुद्धिमान्** – सर्वज्ञனாகிறான். **मुक्तेन** – संसारबन्धरहितனான ब्रह्मத்தோடு, **विमुक्तधर्मा भवति** – विमुक्तமான संसारसंबन्धरूपधर्मवान् भवति । **भरतर्षभ** – भरतश्रेष्ठனான कराळजनकனே! **वियोगधर्मणा** – दुःखवियोगधर्मवता ब्रह्मणा, **वियोगात्मा भवति** – दुःखवियोगरूपधर्मवान् भवति । **विमोक्षिणा** – महानन्दवता ब्रह्मणा, **विमोक्षी भवति** – महानन्दवान् भवति. ''मुक्तिर्मोक्षो महानन्द'' इति निघण्टुः । **शुचिकर्मणा** – पुण्यपापमूलமல்லாத व्यापारத்தையுடைய ब्रह्मத்தோடே, शुचिश्च भवति । **विमलात्मना** – सत्वादिगुणरहितனான ब्रह्मத்தோடு, **विमलात्मा च** – सत्वादिरहितனாகிறான். **केवलेन** – प्राकृतदेहेन्द्रियादिरहितனான ब्रह्मத்தோடே, **केवलात्मा** – प्राकृतदेहेन्द्रियादिसंबन्धरहितो भवति । **स्वतन्त्रेण** – अकर्मवश्यனான ब्रह्मத்தோடு, **स्वतन्त्रश्च सन् स्वतन्त्रत्वमुपाश्नुते** – अकर्मवश्यतैயை யடைகிறான். **एतावदिति** । मोक्षविஷயத்தில் **एतावत्** – இவ்வளவு पर्यन्तம், **यथार्थतत्वं** – प्रामाणिकार्थतत्वத்தை अतिक्रमिக்காமல், **ते** – உனக்கு, **कथितं** – சொல்லப்பட்ட, **एतत्** – समानधर्मत्वादि । **तथ्यं** – सत्यमित्यर्थः, **अमत्सरः** – पक्षपातமில்லாத, **त्वं** – நீயானவன், அதாவது भेदाभेदमतங்களில் पक्षपातமின்றிக்கே शास्त्रैकशरणனாகப்போந்த நீ என்றபடி. **अर्थं** – मुक्तனுக்கும் ब्रह्मத்திற்கு

[18] *பாரதம் ஶாந்திபர்வம் 313-26-31.*

**பேசி, இதுவே परमार्थமென்று महर्षिनिगमित्தான். இங்கு मुक्तனை स्वतन्त्रனென்கிறது कर्मवश्यனன்றென்றபடி. मुक्तविषयமான स्वराट्छब्दத்தை ''अकर्मवश्यः'' என்று भाष्यकारர் व्याख्यानம் பண்ணியருளினார். இப்படி श्रुतिस्मृतिसूत्रங்களிலே साम्यம் कण्ठोक्तமாகையால் मुक्तदशैயில் ऐक्यம் தோன்றின விடங்களெல்லாம் [19]''रामसुग्रीवयोरैक्यं देव्येवं समजायते'' त्यादिகளிற்படியே भेदश्रुत्यविरोधेन கண்டுகொள்வது. இங்ஙனல்லாதபோது [20]''यदा तु मन्यतेऽ-**

---

முள்ள साधर्म्यादिरूपமான पदार्थத்தை. **प्रतिगृह्य** – यथार्थமாக अङ्गीकरित्து, विशुद्धमाद्यं सनातनं ब्रह्म, उपास्वेति शेषः । **பரக்கப்பேசி** – विस्तृतமாகப்பேசி, **இதுவே** – இஸ்साधर्म्यமே, **परमार्थமென்று महर्षि निगमित्தானி**ति । ''एतावदेतत्कथितं मया ते तथ्यं'' என்று முடிக்கையால் परमार्थமென்று निगमित्தானென்றபடி. இதனால் साधर्म्यादिகளெல்லாம் व्यावहारिकங்களென்றும், अत एव मिथ्याविषयங்களென்றும் கல்பிக்கும் பக்ஷம் दूरोत्सारितமாயிற்று. उपात्तवचनங்களில் ''स्वतन्त्रश्च स्वतन्त्रेण'' என்று स्वातन्त्र्यம் சொல்லப்பட்டிருப்பதால் स्वतन्त्रब्रह्मैक्यपरत्वஶங்கை வருமாகையால் அதை निवर्तिप्பிக்கிறார் **இங்கு मुक्तனை स्वतन्त्रனென்கிறது अकर्मवश्यனென்றபடி** इति । बद्धदशैயில் कर्मपरवशனான मुक्तனை स्वतन्त्रனென்றால் அந்த कर्मपारवश्यம் கழிந்தவனென்றே சொல்லவேண்டுமிறே. இதில் श्रीभाष्यकारसंमतियைக் காட்டுகிறார் **मुक्तविषयமான स्वराट्शब्दத்தை** इत्यादिना । இப்படி परमसाम्यம் சொல்லுகிற श्रुत्यादिகளைக்கொண்டு मोक्षदशैயில் मुक्तனுக்கு ब्रह्मத்தோடு परमसाम्यமே तथ्यமென்று निर्णयித்தால் मुक्तिदशैயிலேயே ''ब्रह्म वेद ब्रह्मैव भवती'' त्यादि श्रुतिகளுக்கும், ''तद्भावभावमापन्नस्तदासौ परमात्मना । भवत्यभेदी भेदश्च तस्याज्ञानकृतो भवेत्'' ''विभेदजनके ज्ञाने नाशमात्यन्तिकं गते । आत्मनो ब्रह्मणो भेदमसन्तं कः करिष्यती'' त्यादि स्मृतिகளுக்கும் निर्वाहமெங்ஙனேயென்னில் समाधानமருளிச்செய்கிறார் **இப்படி श्रुतिस्मृती**त्यादिना । **कण्ठोक्तமாகையாலி**ति । कण्ठोक्तत्वात् साम्यश्रुतियானது अन्यथासिद्ध्यनर्हமென்று கருத்து. **ऐक्यம் தோற்றினவிடங்களெல்லாமி**ति । सामानाधिकरण्यादिना अन्यतासिद्ध्यर्हமான ऐक्यம் प्रतीतமானவிடங்களெல்லாம் என்றபடி. भेदश्रुत्यविरोधेन ऐक्यनिर्वाहप्रकारத்தைக் காட்டுகிறார் **रामसुग्रीवयो**रित्यादिना । **ऐक्यं** – तुल्यमनोभाववत्வம், **एवं समजायत** – अन्तःपुरத்திற்கு என்னை தூதனாக்கும்படியாக உண்டாயிற்றென்கை. रामसुग्रीवர்களுக்கு मनोभावैक्यம் தவிர स्वरूपैक्यம் சொல்லமுடியாதிறே. அப்படியே अत्यन्तसाम्यத்தாலே जीवब्रह्मणोः अभेदव्यपदेशத்தை निर्वहिக்கலாமென்று கருத்து. विपक्षத்தில் बाधकமருளிச்செய்கிறார் **இங்ஙன**

---

19 *ராமாயணம் ஸுந்தரகாண்டம் 35-51.*

20 *பாரதம் ஶாந்திபர்வம் 323-77-80.*

**न्योऽहमन्य एष इति द्विजः । तदा स केवलीभूतष्षड्विंशमनुपश्यति ॥ अन्यश्चराजन्! स परस्तथान्यः पञ्चविंशकः । तत्स्थत्वादनुपश्यन्ति ह्येक एवेति साधवः ॥ अन्यश्च राजन्! स परस्तथान्यः पञ्चविंशकः । तेनैतन्नाभिजानन्ति पञ्चविंशकमच्युतम् ॥ जन्ममृत्युभयाद्भीतास्साङ्ख्ययोगाश्च काश्यप! । षड्विंशमनुपश्यन्ति शुचयस्तत् परायणाः", [21]"उत्तमः पुरुषस्त्वन्यः", [22]"तत्र यः परमात्मा तु स नित्यो निर्गुणस्स्मृतः । स तु नारायणो ज्ञेयस्सर्वात्मा पुरुषोहि सः ॥ न लिप्यते**

**ல்லாதபோது** इत्यादिना । **यदात्वित्यादि** । **यदा** – எப்பொழுது, **द्विजः** – द्विजனானவன், **अहं** – நான், **अन्यः** – परमात्मस्वरूपத்தைக்காட்டிலும் विलक्षणस्वरूपத்தையுடையவன். **एषः** – இந்த परमात्माவும், **अन्यः** – मत्स्वरूपाद्विलक्षणस्वरूपன். **इति मन्यते** – என்று தெரிந்துக் கொள்ளுகிறானோ, **तदा** – அப்பொழுது, **सः** – तादृशज्ञानமுள்ள ஜீவாத்மா, **केवलीभूतः** – प्राकृतदेहादिरहितனாய்க்கொண்டு, **षड्विंशमनुपश्यति** – श्रुतिயில் षड्विंशतत्त्वமாகச் சொல்லப்பட்ட பரமாத்மாவை परमपदத்தில் साक्षात्करिக்கிறானென்றபடி . **अन्यश्चेति** । **सः** – அந்த பரமாத்மாவானவன். **अन्यश्च** – जीवात्मस्वरूपத்தைக்காட்டிலும் விலக்ஷணன். **पञ्चविंशकः** – जीवात्मा च, **तथा** – அவ்விதமே, **अन्यः** – परमात्मस्वरूपத்தைக்காட்டிலும் விலக்ஷணன். तर्हि, ஜீவாத்மாவும் பரமாத்மாவும் एकனென்று साधुக்கள் எண்ணுவானேனென்ன வருளிச்செய்கிறார் **तत्स्थत्वादिति** । अन्तर्यामितया जीवान्तस्थितत्वात् जीवात्माவும் परमात्माவும் एकனென்று साधुக்கள் பார்க்கிறார்களேயொழிய, स्वरूपैक्यத்தினாலன்றென்று கருத்து. **अन्यश्चेति** । **तेन** – परस्परभिन्नत्वरूपहेतुவினாலே, **एतत्** – இந்த, **अच्युतं** – परमात्माவை, **पञ्चविंशकं** – पृथिव्यादिचतुर्विंशतितत्त्वात्परனாய், पञ्चविंशति तत्त्वமான ஜீவனாக, **नाभिजानन्ति** – नाङ्गीकुर्वन्तीत्यर्थः । **जन्मेति** । **हे काश्यप!** – ஓ काश्यपனே! **जन्ममृत्युभयाद्भीताः** – जन्ममृत्युभयங்களை विचिन्त्य भीतர்களான, **साङ्ख्ययोगाश्च** – सङ्ख्या – बुद्धिः, तत्संबन्धियोगः, साङ्ख्ययोगः, ज्ञानयोगनिष्ठர்களுமென்றபடி. **शुचयः** – कर्मयोगத்தாலே परिशुद्धमनस्कர்களான, **तत्परायणाः** – परब्रह्मத்தையே परमप्राप्यமாக எண்ணுகிற भक्तियोगनिष्ठர்களும், **षड्विंशं** – षड्विंशतत्त्वமான பரமாத்மாவை, **अनुपश्यन्ति** – प्रत्यक्षसमानाकारமான भक्तियोगத்திலே विषयीकुर्वन्ति । **उत्तम** इत्यादि । **उत्तमः पुरुषः** – उत्तमனான புருஷன், **अन्यः** – "द्वाविमौ पुरुषौ लोके क्षरश्चाक्षर एव च" என்று கீழ்ச்சொன்ன बद्धमुक्तरूपர்களான क्षराक्षरपुरुषர்களைக் காட்டிலும் अत्यन्तविलक्षणனென்கை. **तत्रेति** । **तत्र** – ஜீவாத்மாவில், अन्तर्यामितया अवस्थितः, यः परमात्मा, स तु, **नित्यः** – कालपरिच्छेदरहितனாகவும், **निर्गुणः** – सत्वादिगुणरहितனாகவும், **स्मृतः** – स्मरिக்கப்பட்டான், **स तु** – அவனே, **नारायणो ज्ञेयः** – नारायणனென்று அறியத்தக்கவன். **सर्वात्मा** – सर्वान्तर्यामि, **सः** –

[21] *கிதை 15-17.*
[22] *பாரதம் மோந்திபர்வம் 361-14-15.*

**कर्मफलैः पद्मपत्रमिवांभसा । कर्मात्मात्ववरो योऽसौ मोक्षबन्धैस्सयुज्यते [23]"अयःपिण्डे यथा वह्निर्भिन्नस्तिष्ठत्यभिन्नवत् । तथा विश्वमिदं देवो ह्यावृत्यपरितिष्ठती" त्यादि प्रमाणसहस्रம் விரோधिக்கும். ஆகையால் முக்தனுக்கு ஜ்ஞானभोगादिகளால் வந்த परमसाम्यமே யுள்ளது. ईश्वरனுக்கு छत्रचामरादिகளைப்போலே लक्षणமாகச் சொன்ன**

அவனே. **पुरुषो हि** – पुरुषसूक्तத்தில் சொல்லப்பட்ட पुरुषोत्तमனாக प्रसिद्धன். **कर्मफलैर्न लिप्यते** – ஜீவன்களைப்போல் कर्मங்களை अनुष्ठिத்தாலும் तत्फलसंसर्गத்தையடைவதில்லை யென்கை. அதெப்படி என்னில்; **पद्मपत्रमिवांभसा** – पद्मपत्रமானது स्वोपरिस्थितமான ஜலத்தோடு லேபியாதிருப்பது போல், **कर्मात्मा तु** – पुण्यपापरूपकर्मव्याप्तனாய், अत एव **अवरः** – கீழ்ப்பட்டவனான, **योऽसौ** – யாதொரு ஜீவனுண்டோ, **सः** – அவன், **मोक्षबन्धैर्युज्यते** – मोक्षத்தோடும் संसारबन्धத்தோடும் யோஜிக்கப்படுகிறான். இப்படி ஜீவாத்மா விற்கும் பரமாத்மாவிற்கும் स्वरूपभेदத்தை उपपादिத்து शास्त्रங்களில் ऐक्यव्यपदेशத்திற்கு निर्वाहம் காட்டுகிறார் **अय** इत्यादिना । **अयःपिण्डे वह्निः** – अयःपिण्डத்திலிருக்கிற वह्निயானது, **भिन्नोऽपि** – स्वरूपத்தாலே अयःपिण्डத்தைக் காட்டிலும் வேறுபட்டதானாலும், **यथा अभिन्नवत्तिष्ठति** – न तु वस्तुतः अभिन्न इति भावः, **तथा** – அப்படியே, **देवः** – नारायणனானவன், विश्वத்தைக்காட்டிலும் स्वरूपतो भिन्नனானாலும், **इदं विश्वं** – இந்த सर्वத்திலும், **आवृत्य** – अत्यन्तसंश्लेषं प्राप्य, **अभिन्नवत् परितिष्ठति** – ஒரு வஸ்துபோலிருக்கிறானென்கை. तत एव अयो दहति, तत्वमसीत्यादि व्यवहार इति भावः । **इत्यादि प्रमाणसहस्रं विरोधिக்கும்**ीति । இதனால் முக்தியில் स्वरूपैक्यத்திற்கு बहुप्रमाणविरोधம் संभविக்கிறபடியாலும், ऐक्यबोधककतिपयवचनங்களுக்கு निर्वाहமானது, तत्त्स्थत्वादनुपश्यन्ति, अयःपिण्डे यथा वह्निः, इत्यादि प्रमाणங்களை अनुसरித்துப் प्रदर्शितமாகையாலும், முக்தியில் परमसाम्यமே प्रामाणिकமென்று निर्णयிக்கப்பட்டது. இவ்வளவாலே फलितार्थத்தைக் காட்டுகிறார் **ஆகையால்**ीत्यादिना । **ஆகையால்** – முக்திदशैயிலும் भेदமே உண்டென்று निर्वहिக்கையால், **ज्ञानभोगादिகளால்** – सर्वसाक्षात्कारத் தாலும், प्रमेयत्वव्यापकानुकूलत्वप्रकारकानुभवरूपभोगादिகளாலும் என்றபடி. இப்படியானால் முக்தனுக்கில்லாத परमात्मासाधारणங்களான धर्मங்கள் எவையென்ன, அவைகளை யருளிச்செய்கிறார் ईश्वरனுக்கीत्यादिना । **लक्षणமாகச்சொன்ன** – असाधारणமாகச் சொன்ன. **मोक्षप्रदत्वे**ति । मोक्षस्य परमपुरुषार्थत्वात् तत्प्रदत्वம் पृथक् लक्षणமாகச் சொல்லப்பட்டது. सर्वफल-प्रदत्वமென்கிறவிடத்தில் सर्वफलशब्दத்தை मोक्षेतरसर्वफलविषयமாக संकोचिத்தால் पौन-रुक्त्यादिदोषप्रसङ्गமில்லை. सर्वाधारत्व सर्वनियन्तृत्व सर्वशेषित्वங்கள் सर्वशरीरित्वोपपादकங்கள். लक्ष्मीसहायत्वादीत्यत्र आदिपदात् भूमिनीळानायकत्वगरुडध्वजत्वानन्तभोगशायित्वादीनां संग्रहः । இனி

[23] ஜயாக்யஸம்ஹிதை. (?)

**जगत्कारणत्व मोक्षप्रदत्व सर्वाधारत्व सर्वनियन्तृत्व सर्वशेषित्व सर्वशरीरत्व सर्वशब्दवाच्यत्व सर्ववेदवेद्यत्व सर्वलोकशरण्यत्व सर्वमुमुक्षूपास्यत्व सर्वफलप्रदत्व सर्वव्याप्तज्ञानानन्दस्वरूपत्व लक्ष्मीसहायत्वादिகள் प्रतिनियतங்கள். मुक्तனுக்கு आधेयत्व विधेयत्व शेषत्वाणुत्वादिகள் व्यवस्थितங்கள். இப்படியாகில்; [24]"न संपदां समाहारे विपदां विनिवर्तने । समर्थो विद्यते कश्चित्तं विना पुरुषोत्तमम्" என்கிற நிலையாய் स्वतन्त्रரல்லாத मुक्तருக்கு ஏதேனுமொரு हेतुவாலே आवृत्तिशங்கை வாராதோவென்னில்; அது வாராது; [25]"सायुज्यं प्रतिपन्ना ये तीव्रभक्तास्तपस्विनः । किङ्करा मम ते नित्यं भवन्ति निरुपद्रवाः" என்று தானே யருளிச்செய்தானிறே. मुमुक्षुदशैயில் केवलाचित्த்தையும் केवलचित्த்தையுமனுபவிக்கையாகிற ऐश्वर्यकैवल्यங்களில் वैराग्यம் பிறந்தவிது मुक्तனுக்கு ब्रह्मात्मकமாக सर्वத்தையும் காண்கையாலே केवलानुभवप्रसङ्गமில்லையாமையாலும் அந்த पुरुषार्थान्तरங்களினுடைய दोषமெல்லாம் नित्यप्रत्यक्षित**

பரமாத்மாவிற்கு இல்லாமல் मुक्तனுக்கு व्यवस्थितமான குணங்களைக் காட்டுகிறார் **मुक्तனுக்கு** इत्यादिना । अणुत्वादिகளித்यत्र आदिशब्दம் शरीरत्व पारतन्त्र्य रक्ष्यत्वादिसंग्राहकம். **व्यवस्थितங்கள்** – परमात्मावृत्तिகள். இப்படி मुक्तனுக்கு भगवन्नियाम्यत्वादिகள் உண்டென்றால், भगवत्स्वातन्त्र्यத்தாலே पुनरावृत्ति வாராதோவென்று ஶங்கித்து परिहारமருளிச்செய்கிறார் **இப்படியாகிலி**त्यादिना । **न संपदामिति** । **समाहारे** – சேர்க்கிற விஷயத்திலோ, यद्वा, प्रदान விஷயத்திலோ; **ஏதேனுமொரு हेतुவாலே** इति । मुक्तனுடைய इच्छै, अज्ञानம், प्रीतिरूपமான அவனுடைய भक्तिக்குறைவாலே வந்த स्वतन्त्रனான ईश्वरனுடைய इच्छै इत्यादिகளில் ஏதேனுமொரு हेतुவாலேயென்றபடி. **सायुज्यमिति** । **तीव्रभक्ताः** – परमभक्तिनिष्ठाः, **तपस्विनः** – सर्वतபஸ்ஸிற்கும் மேற்பட்ட न्यासरूपतपो निष्ठास्सन्तः । **सायुज्यं प्रतिपन्नाः** – समानभोगवत्वத்தை அடைந்தவர்களான, **ये मम किङ्कराः** – யாதொரு என்னுடைய कैङ्कर्यनिष्ठர்களுண்டோ; **ते** – அவர்கள், **नित्यं** – सर्वकालத்திலும், **निरुपद्रवा भवन्ति** – पुनरावृत्त्यादि सर्वोपद्रवशून्या भवन्तीत्यर्थः । முதலில் स्वेच्छाप्रयुक्तமான पुनरावृत्तिயில்லை யென்பதை सहेतुकமாக उपपादिக்கிறார் **मुमुक्षुदशैயிலி**त्यादिना । **केवलाचित्த்தையும் केवलचित्த்தையும் अनुभविக்கையாகிற** – चित्த்தையுமचित्த்தையும் अब्रह्मात्मकமாக अनुभविக்கையாகிற, **ऐश्वर्यकैवल्यங்களில்** – ऐश्वर्यशब्दवाच्यமான अतिशयितशब्दादिவிஷயங்களிலும், प्रकृतिवियुक्तात्मस्वरूपानुभवरूपமான कैवल्यத்திலும், **वैराग्यம் பிறந்தவிது** इति । இதற்கு प्रतिष्ठितமாயிற்று என்ப தோடந்வயம். **केवलानुभवप्रसङ्गமில்லாமையாலும்** – अब्रह्मात्मकचेतनाचेतनानुभवத்திற்கு प्रसक्ति

24 பரமஸம்ஹிதை. (?)
25 பரமஸம்ஹிதை. (?)

**மாகையாலும் प्रतिष्ठितமாயிற்று. ஆகையால் தன்னிச்சையடியாக ஆவृत्ति ஶங்கையில்லை. चिदचिदीश्वरतत्वत्रय விஷயமாகவும் हेयोपादेयविषयமாகவும் முன்பு பிறந்த ज्ञानமிப்போது विच्छेदसङ्कोचங்களில்லாதபடி विकसितமா யிற்று. ஆகையால் தன் अज्ञानமடியாக ஆवृत्ति ஶங்கிக்கவொண்ணாது. भगवद्विषयवैलक्षण्यज्ञानத்தாலே முன்பு பிறந்த भक्तिशब्दवाच्यமான प्रीतिरूपापन्नज्ञान மிப்போது शास्त्रங்களுக்கு நிலமல்லாத भगवद्वैलक्षण्यமெல்லாம் प्रत्यक्षமான படியாலே निरतिशयप्रीतिरूपापन्नமாய்த் தலைக்கட்டிற்று. இப்படியிருக்கை யாலே [26]''स च मम प्रियः'' என்ற ஈश्वரனுடைய प्रीत्यतिशयம் அவன் தன்னா**

யில்லாமையாலும், **पुरुषार्थान्तरங்களினுடைய** – ஐஶ்வர்ய கைவல்யங்களுடைய, दोषமெல் லாம் – अल्पत्वास्थिरत्वादिदोषसप्तकமும், **प्रतिष्ठितமாயிற்று** इति । अचञ्चलतया स्थापितமாயிற்று என்றபடி. **ஆகையால்** – दोषदर्शनजन्यமான ஐஶ்வர்யகைவல்யாதிகளில் वैराग्यமானது अचञ्चल-प्रतिष्ठितமாகையால், **தன்னிச்சையடியாக ஆவृत्तिஶங்கையில்லை** इति । मुक्तனுக்கு ஐஶ்வர்யகைவல்யாதிप्रयोजनान्तरத்தில் दोषदर्शनமில்லாவிடிலும், தனக்கு लब्धமான पुरुषार्थத்தின் अतिशयம் தெரியாவிடிலும் पुनरावृत्तिயில் இச்சையுண்டாகப் प्रसक्तियுண்டு. அப்படி யன்றிக்கே ஐஶ்வர்யகைவல்யங்களின் दोषத்தினுடையவும், स्वपुरुषार्थातिशयத்தினுடையவும் ஸாக்ஷாத்காரமே யிருப்பதால், इतरपुरुषार्थங்களில் இச்சைக்கே प्रसक्तियில்லாமையால் तदधीनமான पुनरावृत्तिஶங்கைக்கே प्रसक्तियில்லையென்றபடி. தன் अज्ञानமடியாக வரக்கூடிய ஆवृत्तिஶங்கையை நிரஸிக்கிறார் **चिदचिदीश्वरेत्यादिना । विच्छेदसङ्कोचங்களில் லாதபடி विकसितமாயிற்று** इति । विच्छेदसङ्कोचहेतुவான कर्मம் निश्शेषமாக निवृत्तமான தாலென்று கருத்து. ஆகையால் – हेयोपादेयज्ञानம் विकसितமாகையால், **தன் अज्ञान மடியாக ஆवृत्ति ஶங்கிக்கவொண்ணாது** इति । मुक्तனுக்கு தனக்கு प्राप्तமான मोक्षरूप पुरुषार्थத்தில் उपादेयत्वமும் इतरपुरुषार्थங்களில் हेयत्वமும் தோன்றாவிடிலன்றோ अज्ञानத் தாலே पुनरावृत्ति संभविப்பது. मोक्षத்தில் उपादेयतमत्वமும், इतरपुरुषार्थங்களில் हेयतमत्वமும் साक्षात्कृतமாக இருக்கும்போது अज्ञाननिमित्तமாக पुनरावृत्तिயை ஶங்கிப்பது अत्यन्तमसङ्गत மென்று கருத்து. இனி இவனுடைய भक्तिह्रासத்தாலே வரும் स्वतन्त्रனான ईश्वरனு டைய இச்சையாலுண்டாகக்கூடிய ஆवृत्तिஶங்கையை நிரஸிக்கிறார் **भगवद्विषयेत्यादि**யால். **वैलक्षण्यज्ञानத்தாலே** – शास्त्रजन्यवैलक्षण्यज्ञानमात्रத்தாலே. **முன்பு** – मुमुक्षुत्वावस्थैயில், **இப்போது** – இந்த मुक्तिदशैயில், **தலைக்கட்டிற்று** इति । मुमुक्षुदशैயில் शास्त्रजन्यपरोक्षब्रह्मवैलक्षण्यज्ञानத்

---

[26] *கீதை 7-17.*

**லும் நியமிக்கவொண்ணாதபடி கரைபுரண்டிவனோடு परंपरया संबन्धமுடைய திடர் நிலங்களிலுமேறிப்பாயும்படியாயிற்று. ஆகையால் कर्मமில்லை யேயாகிலும் स्वतन्त्रனான ईश्वरனுடைய விச்சையாலே पुनरावृत्ति யுண்டாகிற தோவென்று ஶங்கிக்கவொண்ணாது. शास्त्रवश्याधिकारங்கழிகையாலே मुक्तदशैயிலாज्ञातिलङ्घनமில்லை. அவனுகப்பே தனக்குகப்பாகையாலே ईश्वराभिमतத்துக்கு विपरीतமானவனுष्ठानமில்லை. ஆகையால் कैङ्कर्यपर्यन्त परिपूर्ण-ब्रह्मानुभवरूपமான मोक्षाख्यपुरुषार्थம் மேல் यावदात्मभाविயாயிற்று. இவையெல் லாத்தையும் நினைத்து [27]"अनावृत्तिश्शब्दादनावृत्तिश्शब्दात्" என்று सूत्रकारரு மருளிச்செய்தார்.**

---

தாலேயே प्रीतिरूपापन्नமான भक्त्यतिशयமுண்டாயிருக்கும்போது मुक्तदशैயில் भगवद्वै-लक्षण्यமெல்லாம் साक्षात्कृतமானபோது निरतिशयप्रीतिरूपமாகவே தலைக்கட்டுமென் பதில் सन्देहமில்லையென்றபடி. **பாயும்படியாயிற்று** – பாயும்படியாகுமென்ற படி. **ஆகையால்** – இவன் விஷயத்தில் भगवत्प्रीति இவன் संबन्धिपर्यन्तமேறிப்பாய் கையால். **स्वतन्त्रனான** इत्यादि । भगवत्प्रीति கரைபுரண்டு வருகையால் भगवाனுக்கு एनं पुनरावर्तयिष्यामि என்கிற इच्छैயே உண்டாவதற்கு प्रसक्तिயில்லையாகையால் तत्प्रयुक्त-पुनरावृत्तिஶங்கைக்கே अवकाशமில்லையென்றபடி. विहिताकरणादिमूलமான भगवदप्रीति யாலே आवृत्तिஶங்கையில்லையென்கிறார் **शास्त्रवश्याधिकारங்கழிகையாலே** इत्यादिना । **आज्ञातिलङ्घनமில்லை** इति । आज्ञातिलङ्घनप्रसक्तिயேயில்லாமையால் तत्प्रयुक्तभगवदप्रीतिக்கும் அதனாலே வரும் पुनरावृत्तिஶங்கைக்கும் अवकाशமேயில்லையென்று கருத்து. निषिद्धानुष्ठानத்தாலே வரும் पुनरावृत्तिஶங்கையை परिहरिக்கிறார் **அவனுகப்பே** इत्यादि யால். **विपरीतமான अनुष्ठानமில்லையிதி** । அவனுகப்பே இவனுக்குகப்பானால் அவன் अभिमतத்திற்கு विरुद्धமாக இவன் अनुष्ठिக்கப் प्रसक्तिயேயில்லாமையால் विपरीता-नुष्ठानप्रयुक्तभगवदप्रीतिயாலே पुनरावृत्तिஶங்கைக்கு अवकाशமேயில்லையென்று கருத்து. पुनरावृत्तिஶங்கையில்லையென்பதை निगमिக்கிறார் **ஆகையாலிதி** । **ஆகையால்** – கீழ்ச்சொன்ன पुनरावृत्तिशङ्काहेतुக்களெல்லாம் अतिदुस्थங்களாகையால். **कैङ्कर्यपर्यन्त परि-पूर्णब्रह्मानुभवरूपமான मोक्षाख्यपुरुषार्थமிதி** । परिपूर्णब्रह्मानुभवமென்ன, तज्जनितप्रीतिकारितமான सर्वविधकैङ्कर्यமென்ன இவ்விரண்டும் कार्यकारणभावத்தாலே अविनाभूतங்களாய்க்கொண்டு मोक्षाख्यपुरुषार्थமாயிற்றென்கை. **மேல் यावदात्मभाविயாயிற்று** इति । पुनरावृत्तिயில்லாத போது இவ்விரண்டும் தானுள்ளவரையிலும் உண்டென்று முடிந்தது. கீழ்ச்

---

[27] *ப்ரஹ்மஸூத்ரம் 4-4-22.*

**ஏறி எழிற்பதமெல்லாவுயிர்க்குமிதமுகக்கும்**
**நாறுதுழாய்முடி நாதனை நண்ணி யடிமையினம்**
**கூறுகவர்ந்து குருக்கள் குழாங்கள் குரைகழற் கீழ்**
**மாறுதலின்றிமகிழ்ந்தெழும்போகத்துமன்னுவமே. *(29)***

சொன்ன அர்த்தத்தில் ஸூத்ரகாரஸம்மதியை வெளியிடுகிறார் **இவையெல்லாத்தையும் நினைத்து – अनावृत्तिश्शब्दादनावृत्तिश्शब्दात् என்று ஸூத்ரகாரரு** மருளிச்செய்தாரிதி । இதினர்த்தம்: **अनावृत्तिः** – மோக்ஷமடைந்த முக்தனுக்கு ஆவ்ருத்தியில்லை. அதாவது ஸம்ஸாரமண்டலத்தில் ஸம்ஸாரிதயா ஆவ்ருத்தியில்லையென்றபடி. **शब्दात्** – ''ब्रह्मलोकमभिसंपद्यते, न च पुनरावर्तते, न च पुनरावर्तत'' इत्यादिशब्दத்தாலென்கை. இந்த ஸூத்ரபாஷ்யத்தில் ''न च उच्छिन्नकर्मबन्धस्य'' इत्यादिना பூர்வோக்தபுனராவ்ருத்திஶங்காஹேதுக்களையெல்லாமுபன்யஸித்து பரிஹாரமருளிச்செய்யப் பட்டதிறே.

இப்படி புனராவ்ருத்தியில்லாத கைங்கர்யபர்யந்தபரிபூர்ணப்ரஹ்மானுபவமாகிற மோக்ஷஸாம்ராஜ்யத்தில் ஸ்திரமாக வர்திக்கக்கடவோமென்று ஒரு பாட்டாலே ஆஶாஸிக்கிறார் **ஏறி எழிற்பதமி**த்யாதினா । **எழில்** – ஶோபையையுடைய. **பதம்** – பரமபதத்தை, **ஏறி** – அர்சிராதிமார்க்கத்தாலே அடைந்து, **எல்லா உயிர்க்கும்** – ஸர்வசேதனர்க்கும், **இதம்** – ஹிதத்தையே, க்ஷேமத்தையே என்றபடி. **உகக்கும்** – உகந்திருக்குமவரான, **நாறு** – பரிமளபூர்ணமான, **துழாய்** – திருத்துழாயை, **முடி** – முடியிலே யுடைய, **நாதனை** – ஸர்வஶேஷியான ஶ்ரிய:பதியை, நாறுதுழாய் என்றது ஸர்வாகாரவிஶிஷ்டத்வத்திற்குமுபலக்ஷணம். **நண்ணி** – கிட்டி, **அடிமையில்** – பகவத்கைங்கர்யத்தில், **நம்** – நம்முடைய, **கூறு** – பாகத்தை, **கவர்ந்து** – ஸ்வீகரித்து; பகவதிச்சானுகுணமான ஸ்வேச்சையாலே ஸர்வவிதகைங்கர்யத்தையும் ஸ்வீகரித்தென்றபடி. **குருக்கள்** – நமக்கும் பகவத்கைங்கர்யப்ராப்தியுண்டாகவேணுமென்று ஆசைப்பட்ட ஆசார்யர்களுடைய, **குழாங்கள்** – பரம்பரையினுடைய, **குரைகழற்கீழ்** – பத்ததஶையில் வாதிகளை வென்றமை தோற்றுகைக்காக, முக்தரான பிறகு பகவானாலே கொடுக்கப்பட்ட வீரவண்டயத்தின் த்வனியோடேகூடிய திருவடிகளின் கீழ், அவர்களோடு கூட என்றபடி. **மாறுதலின்றி** – புனராவ்ருத்தியில்லாதபடி. **எழும்** – அபிவ்ருத்தமான, **போகத்து** – பரிபூர்ணப்ரஹ்மானுபவமாகிற போகஸாம்ராஜ்யத்தில், **மகிழ்ந்து** – மஹானந்தபரிதராய், **மன்னுவமே** – ஸ்திரமாக வர்திக்கக்கடவோமென்கை.

**अविश्रान्तश्रद्धाशतकलहकल्लोलकलुषा**
**ममाविर्भूयासुर्मनसि मुनिसिद्धादिसुलभाः ।**
**मधुक्षीर न्याय स्वगुणविभवासञ्जनकन-**
**न्महानन्दब्रह्मानुभवपरीवाहा बहुविधाः ॥ ४९ ॥**

**इति श्रीकवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य**
**श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु**
**श्रीमद्रहस्यत्रयसारे**
**परिपूर्णब्रह्मानुभवाधिकारः द्वाविंशः ॥**
**श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥**

---

परिपूर्णब्रह्मानुभवजनित प्रीतिकारिताशेषावस्थोचिताशेषकैङ्कर्यமுமிங்கேயே என் மனஸ்ஸில் தோன்றவேண்டுமென்று प्रार्थिக்கிறார் **अविश्रान्तेत्यादिना । मुनिसिद्धादिसुलभाः** – முனிகளாவார் श्वेतद्वीपवासिகள்; सिद्धராவார் नित्यसिद्धர்களான अनन्तगरुडविष्वक्सेनादिகள். आदिपदத்தால் मुक्तர்களுக்கு संग्रहம். அவர்களுக்கு सुलभங்களாயும், अथवा ''வைகுந்தத்தமரும் முனிவரும்'' என்று சொன்ன नित्यमुक्तர்களுக்கு सुलभங்களாயும், **अविश्रान्तं** – अनुपरतம், **यत् श्रद्धाशतं** – இப்போதே छत्रधारणம் பண்ணவேண்டும், चामरव्यजनங்களால் வீச வேண்டும், पादारविन्दसंवहनம் செய்யவேண்டும் என்கிற तत्तत्कैङ्कर्यविषयமான யாதொரு आदरशतமுண்டோ அதினுடைய, **कलह** – अहमेव पुरस्ताद्भवामीत्यादि कलहங்களுண்டோ அவைகளாகிற, **कल्लोल** – அலைகளாலே, அலைகள் போல் அடிக்கடியுண்டாகும் श्रद्धाशतங்களாலென்றபடி. **कलुषाः** – व्यासङ्गங்களாயிருக்கிற, **मधुक्षीरेति । मधुक्षीरन्याय** – मधु-संपर्कक्षीरन्यायத்தாலே, அதாவது मधुவோடுகூடிய क्षीरம் अत्यन्तभोग्यமாகிறாப்போலே என்றபடி. **स्वगुण विभवासञ्जनकनत्** – स्वस्य – मुक्तனான தன்னுடைய, ये **गुणविभवाः** – யாதொரு अपहतपाप्मत्वादिसंपத்துக்களுண்டோ, அவைகளோடே, **आसञ्जन** – ஒன்றாகக் கலக்கையினால், **कनत्** – दीप्यमानமான, अत्यन्तभोग्यभूतமான என்றபடி. जीवगुणसंबन्धத்தாலே ब्रह्मस्वरूपानुभवத்திற்கும், ब्रह्मगुणानुभवத்திற்கும் रसाधिक्यமுண்டாகுமென்று கருத்து. **महानन्दब्रह्म** – निरतिशयानन्दस्वरूपस्वभावமான யாதொரு परब्रह्मமுண்டோ இதினுடைய, **अनुभवपरीवाहाः** – परिपूर्णानुभवजनितप्रीतिकारितकैङ्कर्यविशेषங்களாகிற கடைவாய்த்தல்கள்.

**बहुविधाः** – छत्रचामरधारण, भृङ्गार, पतद्ग्रहादिग्रहणरूपத்தாலே நானாவிधங்களாய்க்கொண்டு, **मम मनसि** – என்னுடைய மனஸ்ஸில், **आविर्भूयासुः** – देहवियोगात्परमनुष्ठेयங்களான कैङ्कर्यங்களெல்லாம் இப்போதே என் மனஸ்ஸுக்கு प्रत्यक्षவிஷயங்களாகவேண்டுமென்கை.

**॥ इति श्रीमदहोबिलमठास्थाने द्विचत्वारिंशत्पट्टे मूर्द्धाभिषिक्तस्य**
**निरवधिकगुरुभक्तिभरितस्य श्रीलक्ष्मीनृसिंहदिव्यपादुकासेवक**
**श्रीवण्शठकोप श्री श्रीरङ्गशठकोपयतीन्द्रस्य कृतौ**
**श्री सारबोधिन्याख्यायां व्याख्यायां**
**परिपूर्णब्रह्मानुभवाधिको द्वाविंशः ॥**



सन्दृष्टस्सारवाग्वित् स्वपर निशितधीस्सङ्गजिन्नैकसंस्थ-
स्स्पष्टोपायोऽतिखिन्नस्सपरिकरभरन्यासनिष्पन्नकृत्यः ।
स्वावस्थार्हं सपर्याविधिमिह नियतं व्यागसं क्वापिबिभ्र-
न्निर्मुक्तस्थूलसूक्ष्मप्रकृतिरनुभवत्यच्युतं नित्यमेकः ॥ ५० ॥

---

इति श्रीकवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे
अर्थानुशासनभागः प्रथमः ॥
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥



---

இந்த संसारमण्डलத்தில் उपोद्घाताधिकारம் முதல் परिपूर्णब्रह्मानुभवाधिकारपर्यन्तமான अर्थानु-शासनभागத்தில் சொன்னபடி ஒருவனாவது தேறி ब्रह्मानुभवம் பண்ணுகிறவனுண்டோ வென்ன, प्रत्यधिकारसारार्थसंपन्नரான அப்படிப்பட்ட மஹாத்மாவும் உண்டென்று ஒரு श्लोकத்தாலேயருளுச்செய்கிறார் **सन्दृष्ट** इत्यादिना । **एकः** – संसारिचेतनः, प्रथमगुरुவாலே ஜாய-மான தशैயில், **सन्दृष्टः** – कृपया कटाक्षितனாய், இதனால் उपोद्घाताधिकारार्थம் सूचितம். **सारवाग्वित्** – रहस्यत्रयरूपமான ஸாரவாக்கையறிந்தவனாய், இதனால் सारनिष्कर्षाधिकारार्थம் संग्रहिக்கப்பட்டது. **स्वपरनिशितधीः** – स्वविषयமாயும் परविषयமாயுமுள்ள लक्षणज्ञानजनितवैलक्षण्य-निश्चयத்தையுடையவனாய், இதனால் प्रधानप्रतितन्त्र, अर्थपञ्चक, तत्त्वत्रय, परदेवतापारमार्थ्याधि-कारार्थங்கள் सूचितங்கள். **सङ्गजित्** – ऐश्वर्यकैवल्यங்களில் सङ्गத்தை ஜயித்தவனாய், இதனால் मुमुक्षुत्वाधिकारार्थம் सूचितம். **नैकसंस्थः** – नैकेषु – अनेकेषु, संस्था – निष्ठा यस्य, இதனால் अधिकारि-विभागाधिकारार्थः सूचितः । **स्पष्टोपायः** – स्पष्टाः उपायाः सद्वारकाः अद्वारकाश्च यस्य । இதனால் उपाय-विभागाधिकारार्थस्सूचितः । **अतिखिन्नः** – आकिञ्चन्यानन्यगतित्वरूपखेदवान् । இதனால் प्रपत्ति-योग्याधि-कारार्थம் सूचितம். **सपरिकरभरन्यासनिष्पन्नकृत्य** इति । இங்கு परिकरशब्दத்தாலே परिकरविभागाधि-कारार्थமும், भरन्यासशब्दத்தாலே साङ्गप्रपदनाधिकारार्थமும், निष्पन्नकृत्यशब्दத்தாலே कृतकृत्याधि-कारार्थமும் सूचितங்கள். **स्वावस्थार्हं** – स्वरूपोपायपुरुषार्थनिष्ठाभिज्ञानरूपமான தன்னுடைய दशैக்கநுகுணமாக. இதனால் स्वनिष्ठाभिज्ञानाधिकारार्थस्संगृहीतः । **सपर्याविधि**யென்பதால் उत्तर-कृत्याधिकारार्थமும், सपर्यैக்கு काष्ठाभूतமான भागवतकैङ्कर्यத்தின் माहात्म्यप्रतिपादकமான पुरुषार्थ-काष्ठाधिकारार्थமும் सूचितம். **इह नियत**மென்பதால் शास्त्रीयनियमनाधिकारार्थமும் **व्यागस**மென்ப

